# संस्कृतश्रीः

## पाठमाला –४

# SAMSKRITHASRI

## Patamala-4



*Published by*

**SAMSKRIT EDUCATION SOCIETY [REGD.]**

*Head Office :*
98-99 Luz Church Road,
Chennai-600 004.
Phone : **2 497 11 01**.

*Admn. Office :*
283, T.T.K. Road,
Chennai - 600 018.

V[th] Edition] 2003 [Rs. 25-00

## ஸம்ஸ்க்ருதஸ்ரீ பத்திரிகை பாடமாலா

மொழிப்பயிற்சி மிக எளிதானது. கருத்துடன் ஊன்றிப்பயிலத் தொடங்கினால் ஓராண்டிற்குள் மொழி வசப்படத் தொடங்கும். பிறகு மொழியிலுள்ள சிறிதும் பெரிதுமான நூல்களை படித்துப் பழகப்பழக மொழி நன்கு வசப்பட்டுவிடுகிறது. மொர்ழியின் இலக்கணமும் கற்பதற்கு எளிதே. தொடர்ந்து கருத்துடன் ஊன்றி ஈடுபடுவதே இதற்கான ஒரே உபாயம். நாம் நன்கு அறிந்த மொழி ஒன்றின் உதவி கொண்டு வேற்று மொழி கற்பதும் மிக எளிது. அந்தந்த மொழியின் தனிச் சிறப்பும் பழகப் பழகத்தானே புரியும். இதைக் கருத்தில் கொண்டே தமிழின் மூலம் ஸம்ஸ்க்ருதத்தைக் கற்பதற்கு உதவுவது என்ற நோக்குடன் 1977ல் காஞ்சீ காமகோடி பீடாதிபர் ஜகத்குரு ஸ்ரீ சங்கராசார்ய ஸ்ரீ ஜயேந்த்ர ஸரஸ்வதீ ஸ்வாமிகள் நல்லாசியுடன் ஸம்ஸ்க்ருதஸ்ரீ துவங்கப் பெற்றது.

பத்திரிகை மூலம் போதித்துத் தபால் மூலம் பயிற்சியில் உதவுவதானது. நேர்முகமாக வகுப்பறைகளில் போதிப்பது போல், எளிதாக அமைய வேண்டுமென்ற கருத்துடன் முயன்றதில் ஓரளவு வெற்றி பெற்றுள்ளோம். தொடர்ந்து இப்பத்திரிகையின் வாசகர் வட்டம் பெருகிவருகிறது.

ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் பாடங்களுடன் எளிய சிறிய சிறந்த கட்டுரைகள், ஸம்பாஷணைகள், சிறு நாடகங்கள், மற்றும் செய்யுள்கள், ஸ்தோத்திரங்கள் இவைகளும் இடம் பெற்று வருகின்றன. அவ்வை வாசகர்களுக்கு இலக்கியங்களில் ஈடுபாட்டை வளர்க்க உதவுகின்றன.

ஸம்ஸ்கிருத எழுத்துப்பயிற்சி முதல் உயர்ந்த காவியப் பகுதிகள் வரை எளிய முறையில் பாடங்கள் வரிசையாக அமைக்க பெற்று ஸம்ஸ்கிருதஸ்ரீ பத்திரிகையில் வெளிவந்தன. ஒவ்வொரு பாடத்தின் இறுதியில் அமைந்த பயிற்சிகளை வாசகர்கள் எழுதி எங்களுக்கு அனுப்பித் திருத்தப் பெற்று திரும்பப் பெறுகிறார்கள்.

# संस्कृतश्रीः पाठमाला-४

## ஸம்ஸ்கிருதஶ்ரீ-பாடமாலா-4

श्रुतिस्मृतिपुराणानां आलयं करुणालयम् ।

नमामि भगवत्पादशंकरं लोकशङ्करम् ॥

### प्रथमः पाठः - பாடம் 1

### कर्मणि लकाराः

வினைச்சொற்கள் 10 லகாரங்களில் அடங்குகின்றன. (1) நிகழ்காலம் – லட். (2) இறந்த காலம் – லிட், லங், லுங் என மூன்று. (3) வருங்காலம் – லுட், ல்ருட் என இரண்டு. (4) கட்டளை – லோட். (5) நம்பிக்கை – லிங், (6) நிபந்தனை – ல்ருங் ஆக ஒன்பது லகாரங்கள். இவை காவியங்களிலும் சாஸ்திரங்களிலும் காணப்படுபவை. லேட் என்பது வேதத்தில் மட்டும் காணக்கூடியது. லிங் இரு வகை விதிலிங், ஆசீர்லிங் என. இவற்றில் லட், லங், ல்ருட், லோட், விதிலிங், ல்ருங் என்ற ஆறைக்கற்றோம். லிட், லுட், லுங், ஆசீர்லிங் என்ற நான்கும் பின்னர் அறிமுகமாகும்.

லகாரங்களின் உபயோகம் இரண்டு வகை. कर्तरि लकाराः செய்வினை (Active Voice) कर्मणि लकाराः செயப்பாட்டுவினை (Passive Voice) என. இதுவரை கற்றவை - कर्तरि लकाराः. அதாவது எழுவாயை (கர்த்தாவை) சார்ந்திருக்கும் வினைச் சொற்கள், இனி கற்கப்படவிருப்பவை कर्मणि लकाराः, அதாவது செயப்படு பொருளைச் சார்ந்திருக்கும் வினைச்சொற்கள். இவைகளை முறையே कर्तरि प्रयोगः, कर्मणि प्रयोगः எனக் கூறுவது முண்டு. अहं पाठान् पठामि । "நான் பாடங்களைப் படிக்கிறேன்". मया पाठाः पठ्यन्ते । "என்னால் பாடங்கள் படிக்கப்படுகின்றன" என்ற இரு வாக்கியங்களில் வினைச் சொற்களின் புருஷ வசனங்கள் மாறுகின்றன. கர்மணி பிரயோகத்தில் கர்மா கர்த்தாவாக மாறும் என்பது மேலெழுந்த வாரியான கூற்று. படிக்கிறேன், படிக்கப்படுகின்றது என இரு இடங்களிலும் வினையைச் செய்பவன் எழுவாய் कर्ता- (நான் நீ அவன் அவள்

அது) முதல் வேற்றுமையில் இருந்தாலும் மூன்றும் வேற்றுமை யிலிருந்தாலும் அது எழுவாய்தான். செயப்படுபொருள் (कर्म) எந்த வேற்றுமையிலிருந்தாலும் செயப்படு பொருளே.

தாதுக்களை ஸகர்மகங்கள் - செய்வினை குன்றுவினை, அகர்மகங்கள் - செய்வினை குன்றியவினை, என்று இரண்டு வகையாகப் பிரித்தறிந்தோம். ஸகர்மக தாதுக்களுக்கு மட்டும் கர்மணி பிரயோகம் உண்டு.

| (कर्तरि प्रयोगः) | (कर्मणि प्रयोगः) |
|---|---|
| अहं पाठान् पठामि | मया पाठाः पठ्यन्ते |
| पिता पुत्रौ रक्षति | पित्रा पुत्रौ रक्ष्येते |
| त्वं निचोलं सीव्यसि | त्वया निचोलः सीव्यते |
| रामः लक्ष्मणं श्लिष्यति | रामेण लक्ष्मणः श्लिष्यते |
| बालौ कन्दुकं क्षिपतः | बालाभ्यां कन्दुकः क्षिप्यते |
| विद्यार्थिनः परीक्षां लिखन्ति | विद्यार्थिभिः परीक्षा लिख्यते |
| देवलकः भगवन्तं अर्चयति | देवलकेन भगवान् अर्च्यते |
| क्राकचिकौ काष्ठं खण्डयतः | क्राकचिकाभ्यां काष्ठः खण्ड्यते |

(निचोलकः ரவிக்கை. देवलकः அர்ச்சகர். क्राकचिकः ரம்பக்காரர்).

கர்த்தரி பிரேயாகத்திலிருப்பதை கர்மணி பிரயோகமாக மாற்ற கீழே கண்ட விதிகளைப் பின்பற்ற வேண்டும்.

1. கர்த்தாவை (எழுவாயை) மூன்றும் வேற்றுமைக்கு மாற்ற வேண்டும்.

2. கர்மாவை (செயப்படுபொருளை) முதல் வேற்றுமைக்கு மாற்ற வேண்டும்.

3. க்ரியாபதத்தை (வினைச்சொல்லை) கர்மாவின் புருஷ வசனங்களுக்குத் தக்கபடி மாற்றவேண்டும். முன்னர் நடந்த பாடங்களில் விளக்கிய முறையில் வினைப்பகுதி + இடைநிலை + விகுதி = வினைச்சொல் என்ற விதிப்படி அமைந்த வினைச் சொற்கள், पठामि, रक्षति, सीव्यसि, श्लिष्यति, क्षिपतः, लिखन्ति,

अर्चयति, खण्डयतः என்ற வினைச் சொற்கள். கர்மணி பிரயோகத்தில் வினைச்சொல் எந்த விகரணத்தைச் சேர்ந்திருந்தாலும் விகரண ப்ரத்யயம் எனும் இடைநிலையை நீக்கி தாதுவுடன் கர்மணி பிரத்யயமாகிய 'ய' சேர்க்கப்படுகிறது. மேல் பரஸ்மைபத விகுதிகளுக்கு பதில் ஆத்மநேபத விகுதிகள் சேர்க்கப் படுகின்றன. ஆத்மநேபத விகுதிகள் செயப்படு பொருளின் புருஷனுக்கும் வசனத்திற்கும் ஏற்ப மாற்றப் படுகின்றன.

| | |
|---|---|
| पठामि–पठ् + य + ते | क्षिपति–क्षिप् + य + ते |
| रक्षति–रक्ष् + य + ते | लिखन्ति–लिख् + य + ते |
| सीव्यति–सीव् + य + ते | अर्चयन्ति–अर्च् + य + ते |
| श्लिष्यति–श्लिष् + य + ते | खण्डयन्ति–खण्ड् + य + ते |

अहं पाठान् पठामि என்ற உத்தமபுருஷ ஏக வசனத்தில் இருந்த வாக்யம் मया पाठाः पठ्यन्ते என்று பிரதம புருஷ பஹு வசனம் கொண்ட வாக்யமாக மாற்றியமைக்கப்பட்டுவிட்டது. त्वं निचोलं सीव्यसि என்ற மத்யம புருஷ ஏக வசனத்திலிருந்த வாக்யம், त्वया निचोलः सीव्यते என்ற பிரதம புருஷ ஏக வசன வாக்யமாக மாறிவிட்டது. மற்ற உதாரணங்களிலும். இம்முறையைப் பின்பற்றி விடையைச் சரிபார்க்கவும்.

பயிற்சி: மேலே கொடுக்கப்பட்டுள்ள வாக்யங்களின் பொருள் எழுதுக.

### விளக்கம் 2

கீழே கர்மணி பிரயோகத்திலுள்ள வாக்யங்கள் கர்த்தரி பிரயோகத்திற்கு மாற்றப்படுகின்றன. மாற்றத்தைக் கவனியுங்கள்.

| (कर्मणि प्रयोगः) | (कर्तरि प्रयोगः) |
|---|---|
| बालकैः इक्षु खाद्यते | बालकाः इक्षुं खादन्ति |
| ताभ्यां त्वं निन्द्यसे | तौ त्वां निन्दतः |
| पितः ! ममापराधाः क्षम्यन्तां (मृष्यन्तां) | पितः! ममापराधान् क्षाम्य (मर्षय) |
| मृगयुना वराहः विध्यते | मृगयुः वराहं विध्यति |

मया हिमखण्डः स्पृश्यते — अहं हिमखण्डं स्पृशामि
तेन छुरिकया नखं वृश्च्यते — सः छुरिकया नखं वृश्चति
युवाभ्यां गीतं आकर्ण्यते — युवां गीतं आकर्णयतः
अस्माभिः पुष्पाणि समर्प्यन्ते — वयं पुष्पाणि समर्पयामः

(मृगयुः வேடன் हिमखण्डः பனிக்கட்டி छुरिका கத்தி)

கவனிக்கவும்: 1. எழுவாய் முதல் வேற்றுமையை ஏற்கிறது. 2. செயப்படுபொருள் இரண்டாம் வேற்றுமையை ஏற்கிறது. 3. வினைச்சொற்கள் எழுவாயைத் தழுவுகின்றன. கர்மணி பிரத்யயமான 'ய' நீக்கப்படுகிறது. அந்த அந்த தாதுவின் விகரண பிரத்யயம் சேர்க்கப்படுகிறது. தாது பரஸ்மை பதமானால் பரஸ்மைபத விகுதியும் ஆத்மநேபதமானால் ஆத்மநேபத விகுதியும் சேர்க்கப்படுகிறது. 4. கர்மணி பிரயோகத்தில் इक्षुः, त्वं, ममापराधाः, वराहः, हिमखण्डः, नखं, गीतं, पुष्पाणि என்ற செயப்படுபொருளுக்கேற்றபடி புருஷ வசனங்களில் வந்த खाद्यते முதலிய வினைச்சொற்கள், கர்த்தரி பிரயோகத்தில் बालकाः, तौ, मृगयुः, अहं, सः, युवां, वयं என்ற எழுவாய்க்கேற்ப புருஷ வசனங்களை ஏற்றுள்ளன.

பயிற்சிகள்: 1. கீழே கொடுத்துள்ள வாக்கியங்களைப் பிரயோகம் மாற்றிப் பொருள் எழுதுக.

1. आवां देवं नमावः । 2. यूयं मां स्पृशथ । 3. गोपालः गुरुं नमति । 4. ते पत्रं लिखन्ति । 5. पित्रा अपराधः क्षाम्यते । 6. तेन किं कथ्यते । 7. वृषभौ कृषकेन तुद्येते । 8. सेनया राष्ट्रं रक्ष्यते । 9. कण्णप्पेन शिवाय नेत्रं अर्प्यते 10. तौ रूप्यकाणि गणयतः ।

கீழே கொடுத்துள்ள வாக்யங்களை ஸம்ஸ்க்ருதத்தில் மொழிபெயர்த்துப் பிறகு பிரயோகத்தை மாற்றவும்.

1. ராம ! நீ பாடம் படி. 2. தந்தை மகனைக் கொஞ்சுகிறார். 3. இறைவன் உலகைப் படைக்கிறார். 4. காளிதாஸன் ராம கதையை வர்ணிக்கிறார். 5. கிருஷ்ணன் பாண்டவர்களைக் காப்பாற்றினார். 6. பசு புல்லை மேய்கிறது. 7. கிளிகள் கோவைப் பழங்களைச்

சாப்பிடுகின்றன. 8. தினமும் 2-3 நெல்லிக்கனிகளைச் சாப்பிடு. 9. நீ என்ன எழுதுகிறாய். 10. அவன் கோவிலுக்குச் சென்று கடவுளை வணங்குகிறான். (கோவைப்பழங்கள் बिंवीफलानि)

## द्वितीयः पाठः - பாடம் 2

# संक्षिप्तं अभिज्ञानशाकुन्तलम् - ६

### पञ्चमं दृश्यम् (अनुवर्तते)

(कण्वस्याश्रमे राजा दुष्यन्तः विदूषको माढव्यश्च संभाषमाणौ वर्तेते। आश्रमे इष्टीनां विघ्नं कुर्वतां रक्षसां उपद्रवेभ्यः रक्षितुं मुनिकुमारौ प्रार्थयताम्। राजा तत्र सहायो भवामीति अङ्गीकृतवान्)

राजा - माधव्य ! अप्यस्ति शकुन्तलादर्शने कुतूहलम्?

विदूषकः - पूर्वं सपरिवाहमासीत्। इदानीं तत्र राक्षसवृत्तान्तेन बिन्दुरपि न अवशेषितः।

राजा - मा भैषीः। ननु मत्समीपे वर्तिष्यसे?

विदूषकः - एष राक्षसात् रक्षितोऽस्मि।

(दौवारिकः प्रविशति)

दौवारिकः - सज्जो रथः। भर्तुः विजयप्रस्थानं अपेक्षते। एष पुनः नगरात् देवीनां आज्ञप्तिहरः करभकः आगतः।

राजा - (सादरं) किं अंबाभिः प्रेषितः?

दौवारिकः - अथ किम्?

राजा - ननु प्रवेश्यताम्?

दौवारिकः - तथा। (निष्क्रम्य करभकेण सह प्रविशति) एष भर्ता। उपसर्प।

करभकः - जयतु जयतु भर्ता। देवी आज्ञापयति। ''आगामिनि चतुर्थे दिवसे मे उपवासः प्रवृत्तपारणो भविष्यति। तत्र दीर्घायुषा अवश्यं संभावनीया''। इति।

राजा - इतः तपस्विनां कार्यम्। इतो गुरुजनानां आज्ञा। द्वयमपि अनतिक्रमणीयम्। किमत्र प्रतिविधेयम्?

विदूषकः - त्रिशंकुरिव अन्तराले तिष्ठ?

राजा - सत्यं आकुलीभूतोऽस्मि। कृत्ययोः भिन्नौ देशौ। पुरः शैले प्रतिहतं स्रोत इव मे मनः द्वैधीभवति। (विचिन्त्य) सखे! त्वं अंबया पुत्र इति प्रतिगृहीतः। अतो भवान् इतः प्रतिनिवर्तताम्। तपस्विकार्ये व्यग्रं मां अंबायै निवेदयतु। तत्रभवतीनां पुत्रकृत्यं भवान् अनुष्ठातुमर्हति।

विदूषकः - यथा राजानुजेन गन्तव्यं, तथा गच्छामि।

राजा-तपोवनस्य उपरोधः परिहरणीयः। सर्वान् अनुयात्रिकान् त्वयैव सह प्रस्थापयामि।

विदूषकः- (सगर्वं) तेन हि इदानीं युवराजः संवृत्तोऽस्मि।

राजा - (स्वगतं) चपलोऽयं वटुः। कदाचित् अस्मत्प्रार्थनां अन्तः - पुरेभ्यः कथयेत्। भवतु। एनं एवं वक्ष्ये। (प्रकाशं-विदूषकं हस्ते गृहीत्वा) वयस्य! ऋषिषु गौरवात् आश्रमं गच्छामि। सत्यमेव तापसकन्यकायां न मम अभिलाषः। वयं क्व? मृगशाबैः समं एधितः अयं जनः क्व? सखे! तत् परिहासेन विजल्पितम्। तद् वचः परमार्थेन न गृह्यताम्।

विदूषकः-अथ किम्। (सर्वे निष्क्रान्ताः। जवनिका परिवर्तते।)

सपरिवाहं பெருக்கெடுத்தோடும்படி न अवशेषितः மிச்சப்படவில்லை मा भैषीः பயப்படாதே विजयप्रस्थानं வெற்றிப்புறப்பாடு अपेक्षते எதிர்பார்க்கிறது आज्ञसिहरः உத்தரவைக் கொண்டுவருபவன் देवी எஜமானி - இங்கு அரசனின் தாய் प्रवेश्यतां உள் அழைத்து வரப்படட்டும் निष्क्रम्य வெளிக்கிளம்பி भर्ता எஜமானன் उपसर्प அருகில் செல் आगामिनि வரவிருக்கிற उपवासः விரதம், பட்டினியிருந்து செய்கிற வழிபாடு पारणा நிறைவு நிகழ்ச்சி प्रवृत्तपारणः நிறைவு நிகழ்ச்சி தொடங்கப்பட்டதாக दीर्घायुः

*நீண்ட ஆயுளுள்ளவன் (தனது அன்பிற்குரிய சிறுவர்களை* दीर्घायुः- आयुष्मान् *என அழைப்பது முறை)* संभावनीया பெருமைப் படுத்தப்பட வேண்டியவள் अनतिक्रमणीयं புறக்கணிக்க முடியாதது, தள்ளிப்போட முடியாதது प्रतिविधेयं சமாளிக்கச் செய்யத்தக்கது, சமயத்திற் கேற்றபடி செயல்படுவது. अन्तरालं நடு आकुलीभूतः கலங்கினவனாக ஆனவன் कृत्यं செய்யவேண்டியது - காரியம் पुरः முன்னதாக प्रतिहतं மோதித்தடங்கலுற்றது द्वैधीभवति இரு முனைகளில் சென்று திணறுகிறது प्रतिगृहीतः ஏற்கப்பட்டவன் प्रतिनिवर्ततां திரும்பட்டும் व्यग्रः முனைந்துள்ளவன் तत्रभवती பெருமைக்குரிய மூத்தவள் पुत्रकृत्यं புத்திரன் செய்யவேண்டியது राजानुजः அரசனின் தம்பி उपरोधः தடங்கல், நெருக்கடி, இடைஞ்சல் अनुयात्रिकः *(தன்னைப்)பின் தொடர்ந்து பிரயாணம் செய்பவன்* प्रस्थापयामि கிளம்பச்செய்கிறேன் अस्मत्प्रार्थना எனது *(சகுந்தலை விஷயமான)* எதிர்பார்வை अन्तःपुरेभ्यः அந்தப் புரத்திற்கு *(அந்தப்புரத்திலுள்ளவர்களுக்கு எனப்பொருள். மனைவியிடம் சொன்னேன் என்று பொருள்பட வீட்டில் சொன்னேன் என்று சொல்வது போல்)* मृगशावाः மான்குட்டிகள் एधितः வளர்க்கப்பட்டவன் विजल्पितम् மேலெழுந்தவாரியாகப் பேசியது अथ किं வேறு என்ன? *(அப்படியே ஏற்கிறேன் எனப்பொருள்)*

பயிற்சி : 1 இந்தப் பாடத்தைத் தமிழாக்கவும்.

2. देवीनां, अंबाभिः राक्षसात्, ऋषिषु, अनुयात्रिकान्, शैले, कन्यकायां, त्वया இந்த சொற்கள் எந்த விபக்தியில் அமைந்திருக்கின்றன? இவற்றின் மற்ற இரு வசனங்களைத் தருக.

3. वर्तिष्यसे, अपेक्षते, अस्मि, गच्छामि, प्रस्थापयामि, आसीत् இவை அமைந்துள்ள லகாரம், புருஷன் இரண்டையும் குறிப்பிட்டு மற்ற இரு வசனங்களைத் தருக.

4. कण्वस्याश्रमे, एष पुनः सहायो भवामि, बिन्दुरपि, संवृत्तोऽस्मि, त्वयैव இவைகளை ஸந்தி பிரித்து எழுதுக. ஸந்திபெயர் தருக.

5. न अवशेषितः, तपोवनस्य उपरोधः, मे उपवासः, इव अन्तराले இவைகளை ஸந்தி சேர்த்து எழுதுக. ஸந்திப்பெயர் தருக

## तृतीयः पाठः - பாடம் 3

## कर्मणि प्रयोगः ஆத்மநேபத தாதுக்கள்

*விளக்கம் 3*

சென்ற பாடத்தில் பரஸ்மைபத தாதுக்கள் கர்மணி பிரயோகத்தில் எவ்விதம் மாறுகின்றன என்பதைக் கற்றோம். ஆத்மநேபத தாதுக்கள் எவ்விதம் மாறுகின்றன என்று பார்ப்போம். ஒரே ஒரு உபவிதி மட்டுமே இதில் விலக்கு. வினைச்சொற்கள் இயற்கையாகவே ஆத்மநேபத தாதுக்களாகவே இருப்பதால் ஆத்மநேபத விகுதிகளையே ஏற்கின்றன. மற்ற விதிமுறைகளில் மாறுதலில்லை.

| கர்த்தரி பிரயோகம் | கர்மணி பிரயோகம் |
|---|---|
| शिष्याः गुरोः उपदेशं लभन्ते | शिष्यैः गुरोः उपदेशः लभ्यते |
| शिरोवेदना मां बाधते | शिरोवेदनया अहं बाध्ये |
| लताः वृक्षान् वेष्टन्ते | लताभिः वृक्षाः वेष्ट्यन्ते |
| रामः हनुमन्तं अस्वजत | रामेण हनुमान् अस्वज्यत |
| त्वं एतत् सत्यं मन्यसे[1] | त्वया एतत् सत्यं मन्यते |
| अहं तव अभिप्रायं नैव बुध्ये[2] | मया तवाभिप्रायः नैव बुध्यते |
| पत्नी भर्तारं प्रीणयते | पत्न्या भर्ता प्रीण्यते |
| श्री सञ्जीवरेड्डिः श्री इन्दिरां सान्त्वयते | श्री संजीवरेड्डिना श्री इन्दिरा सान्त्व्यते |

*கவனிக்கவும்: 5-6 எண்ணுள்ள வாக்கியங்களின் வினைச் சொற்களுக்கருகே 1-2 என்ற எண்கள் உள்ளன. இந்த இரு*

வினைச்சொற்களும் (मन எண்ண बुध அறிய) 4வது விகரணத்தைச் சார்ந்தவை. கர்த்தரிப் பிரயோகத்திலிருந்து கர்மணிப் பிரயோகத்திற்கு மாற்றும்போது य என்ற கர்மணிப்பிரத்யயம் சேர்க்கப் படும்போது மாறுபாடு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் எழுவாயும் செயப்படுபொருளும் முறையே 3-1 வேற்றுமையில் இருப்பதும் வினைச்சொல் செயப்படு பொருளைத் தழுவி நிற்பதும் அடையாளம்.

பயிற்சி: 1. கர்மணி பிரயோகத்திலுள்ள வாக்கியங்களின் பொருளை எழுதவும்.

## चतुर्थः पाठः - பாடம் 4

# संक्षिप्तं अभिज्ञानशाकुन्तलम् - ७

### षष्ठं दृश्यम्

(आश्रमवासी कण्वशिष्यः कुशान् आदाय प्रविशति।)

शिष्यः- अहो महानुभावो दुष्यन्तः। तत्रभवति आश्रमं प्रविष्टमात्र एव, नः कर्माणि निरुपद्रवाणि संवृत्तानि। बाणसन्धाने का कथा? ज्याशब्देनैव, धनुषो हुंकारेणैव, स दूरतः विघ्नान् अपोहति। यावत्, इमान् दर्भान् वेदिसंस्तरणार्थं ऋत्विग्भ्यः उपहरामि। (परिक्रम्य, आकाशे अवलोक्य) प्रियंवदे! कस्य इदं उशीरानुलेपनं मृणालवन्ति नलिनीपत्राणि च नीयन्ते? (श्रुतिमभिनीय) किं ब्रवीषि? 'आतपलंघनात् बलवत् अस्वस्था शकुन्तला। तस्याः शरीरनिर्वापणाय' इति? तर्हि यत्नात् उपचर्यताम्। सा खलु कण्वस्य कुलपतेः उच्छ्वसितम्। अहमपि तावत् वैतानिकं शान्त्युदकं अस्यै गौतमीहस्ते विसर्जयिष्यामि। (इति निष्क्रान्तः)

(ततः प्रविशति कामयमानावस्थो राजा)

राजा - (निश्वस्य) तपसो वीर्यं जाने। सा बाला परवती इति मे विदितम्। तथापि इदं हृदयं ततो निवर्तयितुं न अलमस्मि। (सखेदं परिक्रम्य) कर्मणि संस्थिते सदस्यैः अनुज्ञातः क्व नु खलु खिन्नं आत्मानं विनोदयामि? (निश्वस्य) प्रियादर्शनात् ऋते किं नु अन्यत् शरणम्? यावत् एनां

अन्विष्यामि। (सूर्यं अवलोक्य) इमां उग्रां आतपवेलां प्रायेण लतावलयवत्सु मालिन्याः तीरेषु ससखीजना शकुन्तला गमयति। तत्रैव तावत् गच्छामि। (परिक्रम्य, संस्पर्शं अभिनीय) अहो प्रवातेन सुभगः अयं उद्देशः। अरविन्दैः सुरभिः अयं पवनः। मालिन्याः तरंगाणां कणान् वहति। अयं अनङ्गेन ततैः अङ्गैः अविरलं आलिंगितुं शक्यम्। (परिक्रम्य, अवलोक्य च) अनया बालपादपवीथ्या सुतनुः अचिरात् गता इति तर्कयामि। (परिक्रम्य) अस्मिन् वेतसैः परिक्षिप्ते लतामण्डपे शकुन्तलया सन्निहितया भवितव्यम्। अस्य द्वारे पदपंक्तिः अभिनवा दृश्यते।

आश्रमवासी *ஆசிரமத்தில் வசிப்பவன்* कुशान् *தர்ப்பைகளை* महानुभावः *மேன்மை மிக்கவர்* तत्रभवान् *பெருமை மிக்கவர்* तत्रभवति आश्रमं प्रविष्टमात्रे एव *பெருமை மிக்க அன்னார் ஆசிரமத்தில் நுழைந்தவுடனேயே (ஸதிஸப்தமி)* निरुपद्रवाणि *இடையூறு நீங்கியவைகளாக* संवृत्तानि *நிறைவேறின (ஆக ஆயின)* बाणसन्धाने का कथा *அம்பைத் தொடுப்பது பற்றி என்ன சொல்ல? (அது தேவையில்லை)* ज्याशब्देन *நாணின் ஒலியால்* अपोहति *விரட்டுகிறார்* यावत् *அதற்குள்* वेदिसंस्तरणार्थं (वेदिः *வேள்ளி மேடை) வேள்வி மேடையில் பரப்புவதற்காக* परिक्रम्य *சுற்றிவந்து* अवलोक्य *உற்றுப்பார்த்து* उशीरानुलेपनं *விலாமிச்சை வேரால் ஆன பூச்சு* मृणालवन्ति *(தாமரைக்) கொடியுடன் கூடிய* नलिनीपत्राणि *தாமரை இலைகள்* नीयन्ते *கொண்டு செல்லப்படுகின்றன* श्रुतिं अभिनीय *கேட்பதுபோல் நடித்துக்காட்டி* आतपलंघनं *வெயில் கொண்டது* शरीर निर्वापणं *உடல் சூடு தணிவது* उपचर्यतां *பணிவிடை புரியப்படட்டும்* कुलपतिः *சிஷ்யக் கூட்டத்தலைவர்* उच्छ्वसितं *மூச்சு (மூச்சுபோல் முக்கியமானவள்)* वैतानिकं *வேள்விக்காகத் தயாரிக்கப் பெற்றது* शान्त्युदकं *சாந்தி நீர்* गौतमीहस्ते *கௌதமி (என்ற ஆசிரம*

மூதாட்டி)யின் கையில் (அவள் மூலமாக) विसर्जयिष्यामि கொடுத்தனுப்புகிறேன் कामयमानावस्थः காதல் கொண்டவனின் நிலையில் உள்ளவர் निश्वस्य பெருமூச்சு விட்டுக்கொண்டு जाने அறிவேன் परवती பிறருக்கு அடங்கியவள். (மேலானவர் ஒருவரைக் கொண்டவள்) निवर्तयितुं திருப்ப न अलं अस्मि போதுமானவனாக இல்லை संस्थितं நிறைவு பெற்றது कर्मणि संस्थिते பணி நிறைவுற்றதும் (ஸதிஸப்தமீ) सदस्यः வேள்விச் சாலையில் உள்ளவர் अनुज्ञातः அனுமதிக்கப்பட்டவர் क न खलु எங்கே தான் खिन्नः வேதனைப் பட்டவன் विनोदयामि உல்லாசப் படுத்திக்கொள்வேன், ஒய்வுபெறச்செய்வேன். प्रियादर्शनं அன் புடையாளைப் பார்ப்பது ऋते தவிர किन्नु खलु எதுதான்? शरणं போக்கிடம் अन्विष्यामि தேடுவேன் आतपवेला வெயில் வேளை लतावलयवत् கொடி வளையங்கள் உள்ளது मालिनी மாலினி என்ற ஆறு गमयति போக்குகிறான் (ள்) संस्पर्श अभिनीय (காற்று) மேல் படுவதை (உணர்வதாக) நடித்துக் காட்டி प्रवातः நன்கு வீசும் காற்று सुभगः நன்கு ஈர்க்கும் தன்மையுள்ளது, இனிதானது, அழகானது उद्देशः குறிப்பிட்ட இடம் अर विन्दं தாமரை सुरभिः மணமுள்ளது तरंगाणां कणाः அலைகளின் திவலைகள் अनंगः மன் மதன், காதல் வேகம் अविरतं இடைவிடாமல் आलिंगितुं शक्यं அணைத்துக்கொள்ளத் தக்கது बालपादपवीथी இளம் செடிகளாலான பாதை सुतनुः மெல்லியலாள் अचिरात् சிறிது முன்னரே அண்மையில். तर्कयामि ஊகிக்கிறேன் वेतसः நொச்சிச்செடி परिक्षिप्तं சூழப்பட்டது लतामण्डपे கொடிகளாலான மண்டபத்தில் शकुन्तलया सन्निहितया भवितव्यं சகுந்தலை அருகில் இருக்க வேண்டும் (சகுந்தலை அருகில் இருப்பவளாக இருக்க வேண்டும்) पदपंक्तिः கால் அடிவரிசை अभिनवा மிகப்புதியது

*பயிற்சி: 1. இந்தப் பாடத்தைத் தமிழில் மொழி பெயர்க்கவும் 2.* महानुभावो दुष्यन्तः, प्रविष्टमात्र एव, धनुषो हुंकारणैव, स दूरतः, तपसो वीर्यं, तत्रैव *இவைகளைச் சந்தி பிரித்து எழுதவும் 3.* तत्रभवति आश्रमं, दूरतः विघ्नान्, यावत् इमान्, ऋत्विग्भ्यः उपहरामि, आतपलंघनात् बलवत् अस्वस्था, कुलपतेः, उच्छ्वसितं, परवती इति, सदस्यैः, अनुज्ञातः, यावत् एनां, सुरभिः अयं, मालिन्याः तरंगाणां, तप्तैः अंगैः, गता इति *இவைகளை ஸந்தி சேர்த்து எழுதவும் 4.* आत्मानं, दर्शनात् वलयवत्सु, मालिन्याः, मण्डपे, तरंगाणां, कुलपतेः *இந்த சொற்கள் அமைந்துள்ள விபக்திகளின் மற்ற இரு வசனங்களைக் கூறுக. 5.* विनोदयामि, उपहरामि *இவ்விரண்டு வினைச்சொற்கள் அமைந்த லகாரத்தில் மூன்று புருஷன்களில் உள்ள ரூபங்களைத் தருக.*

## पञ्चमः पाठः - பாடம் 5

## कर्मणि प्रयोगः - விளக்கம் 4

*உங்கள் நினைவிற்கு : (1) 10 லகாரங்களுக்குள் லட், லங், லோட், விதிலிங் இவை நான்கிலும் விகரண பிரத்யயங்கள் சேர்க்கப்படுகின்றன. இவற்றை* Conjugational tenses and moods *என்பர்.* सार्वधातुकं *என்று ஸம்ஸ்க்ருதத்தில் அழைப்பர். மற்ற 5 லகாரங்களிலும் விகரணப்ரத்யயம் சேராது. உதாரணமாய் நாம் கற்ற ல்ருட், ல்ருங் இரண்டிலும் விகரண ப்ரத்யயங்கள் இடையில் வரவில்லை. நேரே தாதுக்களுடன்* स्य *என்ற விசேஷப் ப்ரத்யயம்* (Future sign) + 1 *விகுதி சேர்ந்து வினைச்சொற்கள் வந்தன. உதாரணம்.*

गम् + इष्य + ति = गमिष्यति। क्रुध् + स्य + ति = क्रुत्स्यति।

लिख् + इष्य + ति = लिखिष्यति। गण् + अय् + इष्य + ति = गणयिष्यति।

(गणयिष्यति *என்ற விடத்தில் உள்ள* अय् *என்பது விகரணப் பிரத்யயம் அல்ல. ல்ருட்டில் தனி விகுதியால் வந்தது). இவ்வாறு விகரணப்பிரத்யயம் சேராத வினைச்சொல் வகைகளுக்கு* आर्धधातुकं

(Nonconjugational tenses and moods) என்று பெயர். கர்மணி பிரயோகம் ஆர்த்ததாதுக வகையைச் சேர்ந்தது. இதை முடிந்தவரை நினைவில் கொள்ளுங்கள். நாம் அறிந்து கொண்ட ஆறு லகாரங்களில் லட், லங், லோட், விதிலிங் என்ற நான்கும் ஸார்வ தாதுகம்; ல்ருட், ல்ருங் இரண்டும் ஆர்த்ததாதுகம்.

ஆர் த்ததாதுக வினைச்சொற்களின் உருவங்களைக்கொண்டு அவற்றின் இனங்களை (விகரணங்களை) அடையாளம் கண்டுகொள்ள முடியாது. விகரண பிரத்யயம் சேராது அல்லவா?

குறிப்பு: 1. பல சொற்களைக் கொண்டு அமைத்த நீண்ட வாக்யமாக இருந்தாலும், கர்தரி-கர்மணி-பிரயோகங்களை மாற்ற கர்த்தா, கர்ம, கிரியா இந்த மூன்று சொற்களை மட்டும் மாற்றினால் போதும். மற்ற சொற்கள் மாறாது, உதாரணம்:-

रामः प्रतिदिनं सायंकाले आलयं गत्वा देवं नमति । இது கர்த்தரிப்ரயோகம். இதில் रामः देवं नमति என்ற மூன்று சொற்களே மாறும். (रामः-कर्ता, देवं-कर्म, नमति-क्रिया) रामेण प्रतिदिनं सायंकाले आलयं गत्वा देवः नम्यते । இது கர்மணி பிரயோகம்.

2. ஒரு வாக்யத்தில் பல செயப்படு பொருள்களிலிருந்தாலும் வினைச் சொல்லுடன் நேரிடையாக இணைந்த செயப்படு பொருள் மட்டுமே மாறும். அதை ஒட்டியே வினைச்சொல்லும் மாறும்.

श्रीकृष्णः, गोकुलात् प्रस्थाय, यमुनां तीर्त्वा, मधुरां गत्वा, कुवलयापीडं हत्वा, मल्लान् जित्वा, कंसं हत्वा, पितरौ अनमत् । இங்கு यमुनां, मधुरां, कुवलयापीडं, मल्लान्, कंसं, पितरौ என்று ஆறு கர்ம பதங்கள் உள்ளன. எனினும் अनमत् என்ற வினைச்சொல்லுடன் पितरौ என்பதே இணைகிறது. ஆகையால் श्रीकृष्णः पितरौ अनमत् என் பதைமட்டும் श्रीकृष्णेन पितरौ अनम्येताम् (अ + नम् + य + इतां) என்று மாற்றி, மற்றவைகளை அப்படியே இணைத்து முழுவாக்கியத்தை எழுதவேண்டும். அவ்வாறு அதனை எழுதிப் பொருளும் எழுதுக.

3. எழுவாயின் விசேஷணங்களாக வரும் சொற்கள், எழுவாய் எந்த வேற்றுமையிலிருக்கிறதோ அந்த வேற்றுமையில் தான் இருக்கும். எழுவாயின் வேற்றுமை மாறும் போது, அதன்

விசேஷணங்களின் வேற்றுமையும் அதனை ஒட்டி மாறும். அப்படியே செயப்படுபொருளின் விசேஷணங்களும், செயப்படு பொருள், வேற்றுமை மாற்றங்களை அடையும்போது தாமும் மாறிவிடும்.

गुणवान् विनीतः पुत्रः श्रवणः वृद्धौ अन्धौ पितरौ अपोषयत्। என்ற வாக்கியத்தை எடுத்துக்கொள்வோம். श्रवणः पितरौ अपोषयत् என்பது முக்கிய வாக்யம். श्रवणः என்ற எழுவாய் கர்மணி பிரயோகத்தில் श्रवणेन என மூன்றும் வேற்றுமைக்கு மாறுகிற போது गुणवान् विनीतः पुत्रः என்ற அதன் விசேஷணங்களும் गुणवता विनीतेन पुत्रेण என்று மாறுகின்றன. पितरौ என இரண்டாம் வேற்றுமையிலிருந்த செயப்படுபொருள் கர்மணி பிரயோகத்தில் पितरौ என முதல் வேற்றுமைக்கு மாறும்போது அதன் விசேஷ ணங்களான वृद्धौ अन्धौ முதல் வேற்றுமை மாற்றத்தைப் பெறும். இங்கு துவிசனத்தில் இருப்பதால் மாற்றத்தின் வித்தியாசம் வெளிப்படையாகத் தெரியவில்லை. இதனை வெளிப்படையாகக் காட்ட अन्धं वृद्धं पितरं अपोषयत्, अन्धां वृद्धां मातरं अपोषयत् என்று கர்த்தரி பிரயோகத்தில் வைத்துக்கொண்டால் अन्धः वृद्धः पिता எனவும் अन्धा वृद्धा माता எனவும் கர்மணி பிரயோகத்தில் மாறுவதைக் காணலாம். கர்த்தரி பிரயோகத்தில் உதாரண த்திற்காக எடுத்துக்கொண்ட வாக்கியம்-கர்மணி பிரயோகத்தில் गुणवता विनीतेन पुत्रेण श्रवणेन, वृद्धौ अन्धौ पितरौ अपोष्येताम्। (अ + पोष् + य + इतां) என்று மாறுகிறது.

तपस्वी वाल्मीकिः - तपः स्वाध्यायनिरतं वाग्मिनां वरं मुनिपुंगवं नारदं पर्यपृच्छत् என்பது ஸம்க்ஷேபராமாணத்தின் முதற் செய்யுளின் வாக்கிய அமைப்பு. தவசியான வால்மீகி தவம், வேதமோதுதல், இவற்றில் நாட்டமுள்ளவரும், பேசத்தெரிந்தவர்களில் சிறந்தவரும் முனிவர் பெருமானுமான நாரதரை வினவினார். இது கர்த்தரி பிரயோகம். இதனைக் கர்மணி பிரயோகத்தில் மாற்றும்போது तपस्विना वाल्मीकिना तपःस्वाध्यायनिरतः वाग्विदां वरः

मुनिपुंगवः नारदः पर्यपृच्छ्यत (परि + अ + पृच्छ् + य + त) என்பது முழுவிடை.

எழுவாய் செயப்படுபொருள் இவற்றிற்கு ஏதேனும் உபமானமிருந்தால் அவைகளும் முக்கிய வாக்கியத்தின் எழுவாய் செயப்படுபொருள்கள் அடையும் மாற்றத்திற்கேற்ப மாறும்.

वीरः हनुमान्, मेरुशिखरे विष्ठितं तोयदं इव सिंहासने उपविष्टं रावणं आलोकयत् । வீரனான அனுமான் மேருமலைக்குன்றில் நன்கு அமர்ந்திருக்கும் மேகத்தைப் போன்று சிமமாஸனத்தில் அமர்ந்திருக்கும் ராவணனைப் பார்த்தார். இவ்வாக்கியத்தில் செயப்படுபொருளுக்கு உபமானம் கொடுக்கப்பட்டுள்ளது. हनुमान् रावणं आलोकयत् என்பது முக்கிய வாக்கியம். वीरः என்பது हनुमान् என்பதன் விசேஷணம். கர்மணியில் वीरेण हनुमता என இதனை மாற்றுகிறோம். रावणं என்ற செயப்படுபொருள் रावणः என முதல் வேற்றுமைக்கு மாறுகிறது. அதன் விசேஷணமான सिंहासने उपविष्टं என்பது सिंहासने उपविष्टः என மாறுகிறது. ராவணனுக்கு உபமானமான तोयदं (மேகத்தை) என்பது तोयदः என்றும் मेरुशिखरे विष्ठितं என்ற அதன் விசேஷணம் मेरुशिखरे विष्ठितः என்றும் மாறுகின்றன.

वीरेण हनुमता मेरुशिखरे विष्ठितः तोयदः इव सिंहासने उपविष्टः रावणः आलोक्यत (आ + अ + लोक् + य + त) என்பது முழுவிடை.

ते राक्षसाः वाहनानि बहिः स्थापयित्वा सिंहाः गिरिगुहामिव सभां प्राविशन् । அந்த அரக்கர்கள் வாஹனங்களை வெளியே நிறுத்தி விட்டு சிங்கங்கள் மலைக்குகையை (நுழைவது) போல் ஸபையினுள் நுழைந்தனர் என்பது பொருள். இங்கு राक्षसाः सभां प्राविशन् என்பது முக்கிய வாக்கியம். ते என்பது எழுவாயின் விசேஷணம். கர்த்தாவான ते राक्षसाः என்பது तैः राक्षसैः என 3 ம் வேற்றுமையில் மாறுகிறது. सभां என்ற செயப்படுபொருள் सभा

என முதல் வேற்றுமையில் மாறுகிறது. तैः राक्षसैः सभा प्राविश्यत (प्र + अ + विश् + य + त) सिंहाः என்பது எழுவாய்க்கும் गिरिगुहां என்பது செயப்படுபொருளுக்கும் உபமானம். எனவே அவ்விரண்டு சொற்களும் முறையே 3-1 வேற்றுமைக்கு மாறுகின்றன. सिंहैः गिरिगुहा इव என. वाहनानि बहिः स्थापयित्वा என்ற சொற்றொடர் முக்கிய வினைச்சொல்லுடன் ஸம்பந்தப் படாததால் அங்கு மாற்றம் ஏதுமில்லை. ஆகவே तैः राक्षसैः वाहनानि बहिः स्थापयित्वा सिंहैः गिरिगुहेव सभा प्राविश्यत என்பது முழுவிடை.

பயிற்சி - பிரயோகத்தை மாற்றிப் பொருள் எழுதவும்.

१. बलिष्ठाः वानराः, द्रुमैः आवृतं सह्यपर्वतं, अलंघयन्।

२. क्रूराः व्याघ्रादयः मृगाः, साधून् हरिणादीन्, हत्वा, भक्षयन्ति।

३. आदिकविः वाल्मीकिः, आश्रमे, लक्ष्मणेन परित्यक्तां सीतां असान्त्वयत्।

४. वीरः हनुमान् शयने सुप्तं रावणं, आलोकयत्।

५. अहं भूतगणाधिसेवितं कपित्थजंबूफलसारभक्षितं उमासुतं शोकविनाशकारणं विघ्नेश्वरपादपंकजं गजाननं नमामि।

६. अहं शान्ताकारं भुजगशयनं पद्मनाभं सुरेशं सर्वलोकैकनाथं विष्णुं वन्दे।

## षष्ठः पाठः - பாடம் 6

### கர்மணி ப்ரயோகம்

### விளக்கம் 5

ஸம்ஸ்கிருத மொழியில் சில தாதுக்கள் இரு செயப்படு பொருள்களுள்ளவை. அவை த்விகர்மகங்கள் (द्विकर्मकाः). அவை கர்மணிப் பிரயோகத்தில் மாறும் விதத்தை இனி காண்போம்.

| | | |
|---|---|---|
| 1. | दुह् - दोग्धि | கறக்கிறான் |
| 2. | याच् - याचते | யாசிக்கிறான் |
| 3. | पच् - पचति | சமைக்கிறான் |

4. दण्ड - दण्डयति தண்டிக்கிறான்
5. रुध् - रुणद्धि தடுக்கிறான்
6. प्रच्छ् - पृच्छ् - पृच्छति கேட்கிறான்
7. चि - चिनोति பறிக்கிறான்
8. ब्रू - ब्रवीति சொல்கிறான்
9. शास् - शास्ति உபதேசிக்கிறான்
10. जि - जयति வெல்கிறான் (பந்தயத்தில்)
11. मथ् - मथ्नाति கடைகிறான்
12. मुष - मुष्णाति கொள்ளையடிக்கிறான்
13. नी - नयति கொண்டு போகிறான்
14. हृ - हरति திருடிக்கொண்டு போகிறான்
15. कृष् - कर्षति இழுத்துச் செல்கிறான்
16. वह - वहति சுமந்து செல்கிறான்

இவற்றின் உதாரணங்கள்:

1. गोपालः गां पयः दोग्धि ।

இடையன் பசுவை பாலை கறக்கிறான்.

2. विश्वामित्रः दशरथं रामं अयाचत ।

விச்வாமித்ரர் தசரதரை ராமரை யாசித்தார்.

3. पाचकः तण्डुलान् ओदनं पचति ।

சமையற்காரர் அரிசியை (சாதம்) சாதமாகச் சமைக்கிறார்.

4. न्यायाधिपः अभियुक्तं शतं रूप्यकाणि दण्डयति स्म ।

நீதிபதி குற்றம் சாட்டப்பட்டவனை 100 ரூபாய்களை தண்டித்தார் (அபராதம் விதித்தார்).

5. अपरिचितः कश्चित् यूरोपगामिविमानं देशान्तरं अपरुणद्धि स्म

இன்னார் என அறியாதவர் ஒருவர் ஐரோப்பா செல்லும்

*விமானத்தைக் கடத்தி வேறு தேசத்தை அடையச்செய்தார்.*

*6.* आचार्यः माणवकं षट् प्रश्नान् अपृच्छत्।

*ஆசிரியர் மாணவனை ஆறு கேள்விகளைக் கேட்டார்.*

*7.* वृक्षारोहः दश वृक्षान् फलानि अवाचिनोत्।

*மரமேறி 10 மரங்களை (லிலிருந்து) பழங்களை பறித்தான்.*

स्त्रियः आरामेषु चायावीरूधः चायांकुराणि अवचिन्वन्ति।

*பெண்கள் தோட்டங்களில் தேயிலைச்செடிகளை (ளிலிருந்து) தேயிலைத் தளிர்களைப் பறிக்கிறார்கள்.*

*8-9.* आचार्यः अन्तेवासिनं हितं ब्रवीति/शास्ति।

*ஆசிரியர் மாணவனை (னுக்கு) நன்மைகளை கூறுகிறார்/ போதிக்கிறார்.*

*10.* शकुनिना सहकृतः दुर्योधनः द्यूते धर्मपुत्रं राज्यं अनुजान् पत्नीं द्रौपदीं च अजयत्।

*சகுனியால் உதவப்பட்ட துர்யோதனன் சூதாட்டத்தில் தர்ம புத்திரரை (ரிடமிருந்து) அரசரையும் தம்பிகளையும் மனைவியான துரௌபதியையும் வென்றான்.*

*11.* विष्णुः क्षीरसमुद्रं सुधां मथ्नाति स्म।

*விஷ்ணு பாற்கடலை (லில்) அமிருதத்தைக் கடைந்தார்.*

यशोदा दधि नवनीतं अमथ्नात्।

*யசோதை தயிரை வெண்ணையைக் கடைந்தாள்.*

तैलकारः खर्परां तैलं मथ्नाति।

*வாணியர் கொப்பரையை எண்ணெய் ஆட்டுகிறார்.*

*12.* अद्यत्वे धूमशकटेषु लुण्टाकाः यात्रिकान् धनानि भूषणानि च मुष्णन्ति

*இந்நாட்களில் ரயில் வண்டிகளில் கொள்ளைக்காரர்கள் பிரயாணிகளை (ளின்) பொருள்களையும் நகைகளையும்*

*கொள்ளையடிக்கிறார்கள்.*

13. कृष्णः सायंकाले वत्सान् गोकुलं अनयत्।

*கண்ணன் மாலையில் கன்றுகளை கோகுலத்தை அடையச் செய்தான்.*

14. रावणः सन्यासिवेषेण आगत्य सीतां लंकां अहरत्।

*ராவணன் ஸந்யாஸி வேஷத்தில் வந்து ஸீதையை லங்கைக்கு அபஹரித்துச் சென்றான்.*

15. दुःशासनः द्रौपदीं राजसभां अकर्षत्।

*துச்சாதனன் துரௌபதியை அரசவைக்கு இழுத்துச் சென்றான்.*

16. भृतकः मम मूतं उन्दुस्थानं वहति।

*கூலியாள் என் மூட்டையை பேருந்து நிலையத்திற்கு தூக்கிச் செல்கிறான்.*

*இந்த 16 வாக்கியங்களில் இரண்டு செயப்படுபொருள்கள் இருப்பதைக் காணலாம். கோடிட்டுக்காட்டப்பெற்றவை முக்கிய கர்மா. நேரிடை வினைத் தொடர்புள்ள செயப்படு பொருள்* (Direct Object). *கோடிடப்பெறாத இரண்டாம் வேற்றுமை யிலுள்ள மற்றவை நேரிடைவினைத் தொடர்பில்லாத செயப்படு பொருள்கள் - கௌணகர்மா* (Indirect object). *இவ்வாக்கியங்களைக் கர்மணி பிரயோகமாக மாற்றுவதானால் எந்த செயப்படுபொருளை முதல் வேற்றுமைக்கு மாற்றுவது? எந்த செயப்படுபொருளைத் தழுவி வினைச்சொற்கள் வரும் என்ற கேள்விகள் எழும். இதற்கு விடை - (1)* दुह *முதல்* मुष् *வரை உள்ள 12 தாதுக்கள் உபயோகிக் கப்பட்ட வாக்யங்களில் நேரிடைத் தொடர்பில்லாத செயப்படு பொருள்கள் கௌணகர்மா (கோடிடப்பெறாதவை) முதல் வேற்றுமையை ஏற்கும். அதன் புருஷ - வசனங்களை யொட்டி வினைச்சொற்கள் புருஷ வசனங்களை ஏற்கும். (2)* नी हृ कृष् वह *- என்ற நான்கு தாதுக்கள் உபயோகப்படும்போது முக்கிய மான செயப்படுபொருள்கள் - முக்கியகர்மா (கீழ்க் கோடிட்ட வை) முதல் வேற்றுமையை ஏற்கும். உதாரணம்.*

१. गोपालः गां पयः दोग्धि। (கர்த்தரி)

गोपालेन गौः पयः दुह्यते। (கர்மணி)

२. विश्वामित्रः दशरथं रामं अयाचत। (கர்த்தரி)

विश्वामित्रेण दशरथः रामं अयाच्यत। (अ+याच्+य+त) (கர்மணி)

இங்கு வினைச்சொற்களான दुह्यते अयाच्यत என்பவைகளின் பயன் (effect) பசுவிடமும் தசரதரிடமும் ஏற்பட்டதே தவிர, பால் ராமன் இவைகளுடன் ஏற்படவில்லை. எனவே பசுவும் தசரதரும் முதல் வேற்றுமையில் மாறுகின்றன. இனி மற்ற உதாரணங்கள் மாறுவதைப் பார்ப்போம்.

३. पाचकेन तण्डुलाः ओदनं पच्यन्ते। (पच् + य + अन्ते)

४. न्यायाधिपेन अभियुक्तः शतं रूप्यकाणि दण्ड्यते स्म। (दण्ड् + य + ते)

५. अपरिचितेन केनचित् यूरोपगामि विमानं देशान्तरं अनीयत। (अ + नी + य + त)

இங்கு विमानं எனும் செயப்படுபொருள். நபும்ஸகலிங்கமானதால் இரண்டாம் வேற்றுமையிலிருந்து முதல் வேற்றுமைக்கு மாற்றப்பட்டிருந்தாலும் அந்த வேற்றுமைக்கான வித்யாஸம் தெரியவில்லை.

६. आचार्येण माणवकः षट् प्रश्नान् अपृच्छ्यत। (अ+ पृच्छ्+य+त)

७. वृक्षारोहेण दश वृक्षाः फलानि अवाचीयन्त। (अव + अ + ची + य + अन्त)

स्त्रीभिः आरामेषु चायावीरुधः चायांकुराणि अवाचीयन्त (अव + अ + ची + य + अन्त) இங்கும் முதல் இரண்டாம் வேற்றுமை வேறுபாடு தெரியவில்லை. वीरुद् वीरुधौ वीरुधः, वीरुधं वीरुधौ वीरुधः, वीरुधा वीरुद्भ्यां वीरुद्भिः என்று முதல் மூன்று வேற்றுமைகள்.

8-9 आचार्येण अन्तेवासी हितं उच्यते/शिष्यते। (ब्रू என்ற தாது

கர்மணி பிரயோகத்தில் वच् என்று முதலில் மாறிய பிறகு उच् என மாறும் (उच् + य + ते) அதேபோல் शास् என்பதும் शिष् என மாறும். (शिष् + य + ते)

१०. शकुनिना सहकृतेन दुर्योधनेन धर्मपुत्रः राज्यं अनुजान् पत्नीं द्रौपदीं च अजीयत। (अ + जी + य + त)

११. विष्णुना क्षीरसमुद्रः सुधां मथ्यते स्म। (मथ् + य + ते)
यशोदा दधि नवनीतं अमथ्यत। (अ + मथ् + य + त)
तैलकारेण खर्परा तैलं मथ्यते।

१२. अद्यत्वे धूमशकटेषु लुण्टाकैः यात्रिणः धनानि भूषणानि च मुष्यन्ते। (मुष् + य + अन्ते) यात्री यात्रिणौ यात्रिणः, यात्रिणं यात्रिणौ यात्रिणः என்பது சப்தம்.

१३. कृष्णेन सायंकाले वत्साः गोकुलं अनीयन्त। (अ+नी+य+अन्त)

१४. रावणेन सन्यासिवेषेण आगत्य सीता लंकां अह्रियत।
(अ + ह्रि + य + त)

१५. दुःशासनेन द्रौपदी राजसभां अकृष्यत। (अ + कृष् +य+त)

१६. भृतकेन मम मूतः उन्दुस्थानं उह्यते। (उह्+य+ते) वह्
எனும் வினை उह् என மாறுகிறது.

13-14-15-16 வாக்கியங்களில் வினைச் சொல்லின் பயன் முக்கிய கர்மாவுடன் சேர்கிறது. கௌண கர்மாவில் சேர்வதில்லை.

மற்றொன்றும் கவனிக்கத்தக்கது. முன்சொன்ன 16 தாதுக்களின் பொருள் கொண்ட வேறு தாதுக்கள் உபயோகப் பட்டாலும் இரண்டு செயப்படு பொருள்கள் இருக்கும்.

| | | |
|---|---|---|
| भिक्ष - भिक्षते | யாசிக்கிறான் | (याच्) |
| सु - सुनोति | (சார்) பிழிகிறான் | (मथ्) |
| हृ - हरति | பறிக்கிறான் | (मुष्) |
| भाष् - भाषते | பேசுகிறான் | (ब्रू) |
| वद - वदति | பேசுகிறான் | (ब्रू) |

*உதாரணம்–*

वामनः बलिं वसुधां अभिक्षत। (अयाचत)

*வாமனர் பலியை பூமியை யாசித்தார்*

अहं इक्षुखण्डं रसं सुनोमि। (मथ्नामि)

*நான் கருப்புத்துண்டை சாறு பிழிகிறேன்*

वेङ्कटाद्रौ चोराः पथिकाःस्त्रियः मांगल्यसूत्राणि अपि हरन्ति। (मुष्णन्ति)

*வேங்கடமலையில் திருடர்கள் வழிப்போக்கர்களான பெண்களைத் திருமங்கலியச்சரடுகளைக் கூட அபகரிக்கிறார்கள்.*

पथिका पथिके पथिकाः *(என ஸ்திரீ லிங்க சப்தம்)*

पिता पुत्रं धर्मं भाषते/वदति।

*தந்தை மகனுக்குத் தர்மத்தைப் பற்றி பேசுகிறார்.*

*கோடிட்டுக் காட்டப்பட்டவை முக்கிய கர்ம* बलिं इक्षुखण्डं स्त्रियः, पुत्रं *கௌணகர்மா. கர்மணி பிரயோகத்தில் இவை மாறும் விதம்.*

वामनेन बलिः वसुधां अभिक्ष्यत। (अ + भिक्ष् + य + त)

मया इक्षुखण्डः रसं सूयते। (सू + य + ते)

वेङ्कटाद्रौ चोरैः पथिकाः स्त्रियः मंगलसूत्राण्यपि ह्रियन्ते।

(ह्रि + य + अन्ते)

पित्रा पुत्रः धर्मं भाष्यते/उद्यते।

(भाष् + य + ते, (वद्) उद् + य + ते)

## सप्तमः पाठः பாடம் 7

## संक्षिप्तं अभिज्ञानशाकुन्तलम् - ७

(काश्यपस्याश्रमे राजा दुष्यन्तः, शकुन्तलामवलोकयितुं मालिन्याः नद्याः तीरं गच्छति। तत्र लतामण्डपे शकुन्तला कुसुमास्तरणमधिशयाना सखीभ्यां अन्वास्यते। राजा कुत्रचित् प्रच्छन्नः तिष्ठन् तासां विश्रंभकथितानि

शृणोति। अनसूया प्रियंवदा च सख्यौ। शकुन्तला अस्वस्था। सख्यौ नलिनीपत्रेण वीजयतः।)

सख्यौ-हला शकुन्तले, अपि नलिनीपत्रवातः सुखयति?

शकुन्तला-सख्यौ! किं मां वीजयतः?

राजा-शकुन्तला बलवत् अस्वस्थशरीरा वर्तते। तत् किं अयं आतपदोषः? उत यथा मे मनसि वर्तते तथा मन्मथस्य तापः?

अनसूया - सखि! बलवान् खलु ते तापः। आवां मदनगतस्य वृत्तान्तस्य अनभ्यन्तरे। इतिहासेषु कामयमानानां अवस्था श्रूयते। तादृशीं तव पश्यामि। कथय - किंनिमित्तः ते सन्तापः? विकारं परमार्थतः अज्ञात्वा प्रतीकारो नारभ्यते खलु?

शकुन्तला - (स्वगतं) राज्ञि मम बलवान् अभिनिवेशः। इदानीमपि सहसा एतयोः निवेदयितुं न शक्नोमि।

प्रियंवदा - सखि शकुन्तले! सुष्ठु एषा भणति। आत्मनः आतङ्कं कुतः उपेक्षसे? अनुदिवसं अङ्गैः परिहीयसे खलु?

शकुन्तला-सखि! कस्य वा अन्यस्य कथयिष्यामि। किन्तु वां आयासयित्री भविष्यामि।

सख्यौ-अत एव खलु निर्बन्धः। स्निग्धे जने संविभक्तं दुःखं हि सह्यवेदनं भवति।

शकुन्तला-सख्यौ! यतः प्रभृति मम दर्शनपथं आगतः, स तपोवनस्य रक्षिता राजर्षिः.... (इति अर्धोक्ते लज्जां नाटयति)

सख्यौ-कथय प्रियसखि।

शकुन्तला-तत आरभ्य तस्मिन् गतेन अभिलाषेण एतदवस्था संवृत्ता अस्मि।

राजा - (सहर्षं स्वगतं) श्रोतव्यं श्रुतम्। पूर्वं स्मरः मे तापहेतुरासीत्। इदानीं स एव तापस्य निर्वापयिता जातः।

लतामण्डपः கொடி மண்டபம் कुसुमास्तरणं பூக்களாலான விரிப்பு अन्वास्यते பணிவிடை செய்யப் பெறுகிறுள் प्रच्छन्नः மறைந்திருப்பவளுக विश्रंभकथितानि ரகசியப் பேச்சு வார்த்தை अस्वस्था உடல் நிலை நேரில்லாதவள் नलिनीपत्रं தாமரை இலை वीजयतः வீசுகிறுர்கள், (वीजयति वीजयतः वीजयन्ति) सुखयति சுகத்தைத் தருகிறது आतपदोषः வெயிலால் ஏற்பட்ட கெடுதி उत அல்லது मदनगतस्य மன்மதனைப்பற்றியதான अनभ्यन्तरे பரிசயமில்லாதவர்கள் (अनभ्यन्तरा अनभ्यन्तरे अनभ्यन्तराः) अवस्था நிலை कामयमानानां காதலிப்பவர்களது किंनिमित्तः எதனைக் காரணமாகக் கொண்டது विकारः நோய்நிலைக்கான மாறுதல் परमार्थतः சரியாக, உண்மையாக अज्ञात्वा அறியாமல் प्रतिकारः மருத்துவம் न आरभ्यते ஆரம்பிக்கப்படுவதில்லை (आरभ्यते आरभ्येते आरभ्यन्ते) अभिनिवेशः ஈடுபாடு सहसा திடீரென, உடனடியாக भणति சொல்கிறுன் (भणति भणतः भणन्ति) आतंकः வேதனை उपेक्षसे உபேக்ஷிக்கிறுய்-பொருட்படுத்தாதிருக்கிறுய் अनुदिवसं ஒவ்வொரு நாளும் अङ्गैः परिहीयसे உடலால் இளைத்து வருகிறுய் आयासयित्री வேதனைப்படுத்துபவள் संविभक्तं பங்கு பிரிக்கப் பெற்றது दर्शनपथं गतः கண்ணில் பட்டார், கண்வழி புகுந்தார் अर्धोक्ते பாதிசொல்லிக்கொண்டிருக்கும்போதே एतदवस्था இந்நிலை அடைந்தவள் संवृत्तास्मि ஆகி இருக்கிறேன் श्रोतव्यं श्रुतं கேட்கத்தக்கது கேட்கப்பட்டது स्मरः மன்மதன் निर्वापयिता, அணைப்பவன்.

பயிற்சிகள்:

1. सुखयति, उपेक्षसे, कथयिष्यामि மூன்றின் மூன்று புருஷன்களிலும் மூன்று வசனங்களிலும் உள்ள ரூபங்களை எழுதுக. இவை எந்த லகாரத்தைச் சேர்ந்தவை?

2. सख्यौ, आवां, कामयमानानां, एतयोः, जने, रक्षिता இவை அமைந்துள்ள விபக்தியின் மற்ற இரு வசனங்களை எழுதுக.

# अष्टमः पाठः - பாடம் 8

## समासाः சொற்கள் கூட்டு - Compounds

முன்னுரை: 1 ஸந்திகளில் குறைந்தது இரண்டு பதங்கள் சேரும். சேரும்போது अ + इ = ए, इ + अ = य போன்ற சில மாற்றங்கள் ஏற்படும் என்பதை அறிவோம். ஸமாஸத்திலும் இரண்டு பதங்கள் குறைந்தபக்ஷம் சேரும். சேரும் போது மாற்றங்கள் ஏற்படும் உதாரணம்:

| ஸந்தியில் | ஸமாஸத்தில் |
|---|---|
| तथा + इति = तथेति | सूर्य + उदयः = सूर्योदयः |
| इति + उक्त्वा = इत्युक्त्वा | जन + अधिपतिः = जनाधिपतिः |

ஆனால் ஸந்தியில் சேர்ந்த பதங்களைச் சேர்த்தபடியே பிரித்து விடலாம். (ஒட்டிய தபால்தலையை ஊறவைத்து எடுப்பது போல்) ஸமாஸத்தில் அவ்வாறு எளிதில் முடியாது. காய்ச்சிப் பற்றவைத்த உலோகத் தகடுகளைப் பிரிப்பது போல். सूर्योदयः, जनाधिपतिः என்ற சொற்கள் இணையும்போது सूर्यस्य + उदयः, जनानां + अधिपतिः என்று இருந்தன. முதல் பதத்தில் வேற்றுமை உருபுகள் மறைந்து सूर्य + उदयः = सूर्योदयः, जन + अधिपतिः என்று மாறிவிட்டன. ஆகவே இணைந்தபடி பிரிக்க முடியாது.

2. ஸமாஸம் அடைந்த பதங்களுக்கு समस्तपदानि ஸமஸ்த பதங்கள் (Compound word) என்று பெயர். ஸமஸ்த பதத்தின் பொருளை விளக்கும் சொற்றொடருக்கு विग्रह वाक्यं என்று பெயர்.

| विग्रह वाक्यं | ஏற்படும் மாறுதல் | समस्तपदं |
|---|---|---|
| सूर्यस्य + उदयः | सूर्य + उदय | सूर्योदयः |
| इष्टं + अनतिक्रम्य | इष्टं + यथा | यथेष्टं |
| रामः + लक्ष्मणः च | राम + लक्ष्मण | रामलक्ष्मणौ |

3. ஸமாஸத்தில் குறைந்தது இரண்டு பதங்கள் சேரும் என்றோம். முதல் பதத்துக்கு पूर्वपदं என்றும், பின்பதத்துக்கு उत्तरपदं என்றும் பெயர். இப்பதங்களின் பொருள்கள் முக்கியத்துவம்

பெறுவதைப் பொறுத்து ஸமாஸங்கள் 1 पूर्वपदार्थप्रधान समासः 2 उत्तरपदार्थप्रधान समासः 3 उभयपदार्थप्रधान समासः 4 अन्यपदार्थप्रधान समासः என்று நான்கு வகைப்படும்.

4 ஸமாஸத்திலுள்ள இரண்டு பதங்களுக்குள் எந்தச் சொல்லின் பொருளுக்கு அடுத்த பதத்துடன் இணைவதற்கு மிகுதியான பொருத்தமுள்ளதோ அதுவே முக்கியமாகும். 'गोक्षीरं मधुरं' என்ற வாக்கியத்தில் गोक्षीरं என்ற ஸமஸ்தபதத்திலுள்ள क्षीरं என்ற பதத்தின் பொருளுக்கு मधुरं என்ற சொல்லின் பொருளுடன் இணைவதற்கு அதிக உரிமை உள்ளது 'ராஜகுமாரன் வந்தான்' என்ற வாக்கியத்தில் குமாரன் என்ற பதத்தின் பொருளே வந்தான் என்ற சொல்லுடன் இணைகிறது "ராஜ" என்பதற்கு முக்கியத்துவமில்லை. இவை இரண்டும் उत्तरपदार्थप्रधानं (பின் சொல்லின் பொருள் முக்கியத்வம் பெற்ற) समासங்களாகும்.

## नवमः पाठः - பாடம் 9

## पूर्वपदार्थप्रधानः अव्ययीभावः அவ்யயீபாவம்

(1) இவ்வகை ஸமாஸத்தில் சேரும் இரண்டு பதங்களுக்குள் முன்பதத்தின் பொருள் முக்கியத்துவம் பெறும். அதாவது வாக்கியத்தின் மற்ற பதத்துடன் சேர அதிக உரிமை பெறும். (2) பெரும்பாலும் இவை அவ்யயமாக (இடைச்சொல்) (Adverb) இருக்கும். அதனால், இதற்கு இப்பெயர் வந்துள்ளது.

| | |
|---|---|
| अहं प्रतिदिनं पाठान् पठामि । | (தினம் தோறும்) |
| मया मध्येमार्गं रमेशः दृष्टः । | (நடு வழியே) |
| पक्षिणः आकाशे यथेष्टं/यथेच्छं डयन्ते । | (இஷ்டப்படி, விருப்பப்படி) |
| सः आसन्ध्यं कार्यालये कर्म करोति | (மாலை வரை) |
| त्वं प्रत्यक्षं किमपि वदसि, परोक्षं किमपि चेष्टसे । | (கண் எதிரில், கண் மறைவில்) |

இனி இவைகளின் விக்ரஹவாக்கியங்களையும், மாறுதல்களையும் ஸமஸ்தபதங்களையும் கவனிப்போம்.

| விக்ரஹவாக்யம் | பொருள் | ஏற்படும் மாறுதல் | ஸமஸ்தபதம் |
|---|---|---|---|
| दिने दिने | தினம் தினம் | दिनं प्रति/अनु | प्रतिदिनं/अनुदिनं |
| मार्गस्य मध्ये | நடுவே | मार्ग मध्ये | मध्येमार्गं |
| इष्टं अनतिक्रम्य | மீறாமல் | इष्टं यथा | यथेष्टं |
| इच्छां अनतिक्रम्य | மீறாமல் | इच्छां यथा | यथेच्छं |
| सन्ध्यां अभिव्याप्य | உள்ளடக்கி | सन्ध्यां आ | आसन्ध्यं |
| अक्ष्णोः आभिमुख्ये | எதிராக | अक्षि प्रति | प्रत्यक्षम् |

*குறிப்பு: 1 இந்த ஸமாஸத்தில் விக்ரஹ வாக்யங்களில் காணப்படும் இரண்டாவது பதத்துக்குப் பதிலாக ஒரு அவ்யயப் பகுதி தோன்றுகிறது. அது ஸமாஸத்தின் முதல் பகுதியாக இடம் பெறுகிறது. அதன் பொருளே வாக்யத்தின் மேல் பதங்களுடன் நெருங்கிய சம்பந்தம் பெறுகிறது. எனவே* पूर्वपदार्थ प्रधान समासं *ஆகிறது. 2 பொதுவாக ஸமாஸங்களில் வரும் பதங்களே விக்ரஹவாக்யத்திலும் அமைந்திருக்கும். விக்ரஹ வாக்யத்தில் வரும் பதங்களே ஸமாஸங்களிலும் காணப்படும். இங்கு அப்படி இல்லை. ஆகையால் இந்த ஸமாஸத்தை* अ-स्वपद-विग्रह समासः *என்பர். உரிய பதத்தை விக்ரஹ வாக்யத்தில் கொள்ளாதது என்று பொருள்.*

*மேலும் சில அவ்யயீபாவ ஸமாஸ உதாரணங்களைக் கற்போம்.*

१. दिशयोः मध्ये *(திசைகளுக்கு இடையே)*

दिशा + अप — अपदिशं

२. कृष्णस्य समीपे *(கிருஷ்ணனுக்கு அருகில்)*

कृष्ण + उप — उपकृष्णं

३. आयस्य योग्यं *(வரவுக்கு தக்கபடி)*

आय + अनु — अन्वायं

४. अर्थं अनतिक्रम्य *(பொருளுக்கு முரண்படாமல்)*

अर्थ + यथा — यथार्थं

५. ज्येष्ठस्य आनुपूर्व्येण *(முதியவர் வரிசையாக)*

ज्येष्ठ + अनु — अनुज्येष्ठं

६. तृणमपि अपरित्यज्य *(புல்லையும் விடாமல்)*

तृण + स सतृणं

७. गङ्गायाः पारे *(கங்கையின் அக்கரையில்)*

गङ्गा + पारे पारेगङ्गं

८. मणेः सदृशं *(மணி என்பவரைப்போல்)*

मणि + स समणि

९. यावन्तः पुरुषाः तावन्तः *(எவ்வளவு மனிதர்களோ அவ்வளவு)*

पुरुष + यावत् यावत्पुरुषं

१०. अक्ष्णः योग्यं *(பார்வைக்கு எட்டக் கூடியபடி)*

अक्षि + सं समक्षम्

११. अक्ष्णः आभिमुख्ये *(கண்ணுக்கு எதிரில்)*

अक्षि + प्रति प्रत्यक्षं

१२. अक्ष्णः अविषये/परं *(கண்ணுக்கு அப்பால்)*

अक्षि + पर परोक्षं

१३. अक्ष्णः पश्चात् *(கண்ணுக்கு பின்னால்)*

अक्षि + अनु अन्वक्षम्

१४. परितोषं अभिव्याप्य *(சந்தோஷம் வரும் வரை)*

परितोष + आ आपरितोषं

*பயிற்சி: 1 தமிழில் மொழி பெயர்க்கவும்.*

१. प्राची दक्षिणा प्रतीची उदीची इति चतस्रः दिशः (दिशयोर्मध्ये) उपदिशः (विदिशः) चतस्रः। अधः ऊर्ध्वं च द्वे दिशौ। आहत्य दशसु दिशासु रथं चालयितुं समर्थः दशरथो महाराजः।

२. उपकृष्णं या तिष्ठति सैव राधा।

३. पुत्रक! अन्वायं ते व्ययो भवतु। अन्यथा क्लिश्येः।

४. वानर! अपि त्वं वैश्रवणस्य दूतः? यमस्य वरुणस्य वा दूतोऽसि? यथार्थं कथय/इति राक्षसाः हनुमन्तमपृच्छन्।

५. अनुज्येष्ठं पदव्युन्नतिं केचिदपेक्षन्ते। अन्वार्हन्ति पदोन्नतिं अन्ये

मन्यन्ते।

६. बुभुक्षितः छागः सकाण्डं पल्लवं भक्षयति।

७. हृषीकेशे पारेगङ्गं गीताभवनं वर्तते।

८. गायकेषु केचित् समणि गायन्ति।

९. बालिकाः गोपिकागीतं यावच्छलोकं रागैः गायन्ति।

१०. शंकरः गौर्याः समक्षं मन्मथं अदहत्।

११. "प्रत्यक्षे गुरवः स्तुत्याः परोक्षे मित्रबान्धवाः। कर्मान्ते दासभृत्याश्च न कदाचन पुत्रकाः।" इति काचित् नीतिः।

दिक् (दिश्) दिशा திசை क्लिश्येः *கஷ்டப்படுவாய்* चालयितुं ஓட்ட पदव्युन्नतिः *உத்தியோக உயர்வு* अन्वार्हन्ति (आर्हन्ती தகுதி आर्हन्तीं अनुसृत्य) *தகுதிக்குத் தக்கபடி.*

## दशमः पाठः - பாடம் 10

## संक्षिप्तं अभिज्ञानशाकुन्तलम् -९

### षष्ठं दृश्यम् (अनुवर्तते)

(शकुन्तला सखीभ्यां अन्वास्यते। राजा अपवृतः तिष्ठति।)

शकुन्तला-तत् यदि वां अनुमतं, तथा कुरुतं यथा तस्य राजर्षेः अनुकंपनीया भवामि। अन्यथा सिञ्चतं मे तिलोदकम्।

प्रियंवदा-(जनान्तिकं) अनसूये, अस्याः कामो दूरं गतः। कालहरणस्य अक्षमा इयम्। यस्मिन् एषा भावं बद्धवती, स पौरवाणां ललामभूतः। तदस्या अभिलाषोऽभिनन्दितुं युक्तम्।

अनसूया-तथा यथा भणसि।

प्रियंवदा-(प्रकाशं) सखि! दिष्ट्या ते अभिनिवेशः अनुरूपः। सागरं उज्झित्वा कुत्र वा महानदी अवतरति।

अनसूया-अविलंबितं निभृतं च सख्याः मनोरथं संपादयावः। तत्र कः पुनः उपायो भवेत्?

प्रियंवदा-निभृतमिति तु चिन्तनीयम्। शीघ्रमिति सुकरम्।

अनसूया-कथमिव?

प्रियंवदा-स राजर्षिः अस्यां स्निग्धदृष्ट्या अभिलाषां सूचयति ननु? एतान् दिवसान् प्रजागरेण कृशो लक्ष्यते। (विचिन्त्य) हला। मदनलेखोऽस्मै क्रियताम्। तं सुमनोभिः गोपितं कृत्वा देवप्रसादस्य अपदेशेन अस्य हस्तं प्रापयिष्यामि।

अनसूया-सुकुमारः प्रयोगः। मे रोचते। किं वा शकुन्तला भणति?

शकुन्तला-किं वां नियोगः विकल्प्यते?

प्रियंवदा-तर्हि चिन्तय किमपि ललितं पदबन्धनम्।

शकुन्तला-हला ! अहं चिन्तयामि। अवधीरणायाः भीरु मे हृदयम्। ततो वेपते।

राजा-(आत्मगतं सहर्षं) यस्मात् अवधीरणां विशंकसे, सोऽयं ते सङ्गमे उत्सुकः तिष्ठति। प्रार्थयिता श्रियं लभेत वा? न वा? न जाने। परं श्रिया ईप्सितो जनः कथं दुरापः?

सख्यौ-अयि ! आत्मनो गुणान् त्वं अवमन्यसे ! कः इदानीं शरीरतापस्य निर्वापयित्रीं शारदीं ज्योत्स्नां पटान्तेन वारयति।

शकुन्तला-(सस्मितं) इदानीं नियोजिता अस्मि। (इति उपविष्टा चिन्तयति।) हला चिन्तितं मया लेखवस्तु। परं लेखनसाधनानि न सन्निहितानि।

प्रियंवदा-अस्मिन् सुकुमारे नलिनीपत्रे नखैः वर्णानि निक्षिप।

शकुन्तला - (तथा कृत्वा) हला, शृणुतं इदानीं संगतार्थं न वा इति।

सख्यौ - अवहितौ स्वः।

शकुन्तला - (वाचयति) निर्घृण ! तव हृदयं न जाने। मम पुनः अङ्गानि कामः रात्रावपि बलीयः तपति।

राजा-(सहसा तां उपसर्पति) तनुगात्रि ! मदनः त्वां अनिशं तपति, मां पुनः दहत्येव। दिवसो यथा शशांकं ग्लपयति, न तथा कुमुद्वतीं ग्लपयति।

सख्यौ-(राजानं विलोक्य, सहर्षं उत्थाय) स्वागतं मनोरथस्य। (शकुन्तला अभ्युत्थातुं इच्छति)

अन्वास्यते பணிவிடை செய்யப்படுகிறாள் अपवृतः மறைந்திருப்பவனாக अनुमतं அனுமதிக்கப்பெற்றது अनुकंपनीया பரிவிற்குரியவளாக सिञ्चतं தெளியுங்கள் सिञ्च सिञ्चतं सिञ्चत। अन्यथा सिञ्चतं मे तिलोदकम् இல்லாவிடில் எள்ளு கலந்த நீரைத் தெளியுங்கள். (நான் மாய்ந்து விடுவேன் எனப்பொருள்) जनान्तिकं இருவருக்குள், தனிமையில், காதோடு कालहरणं பொழுதுபோக்கு अक्षमा பொறுக்காதவள், தாங்கமுடியாதவள் भावं बद्धवती கருத்தை - ஆசையை ஆழப்படுத்திக் கொண்டிருக்கின்றவள் पौरवः பூருவம்சத்தினன் ललामभूतः தலையணியாக (சிறந்தவனாக) இருப்பவன் भणसि சொல்கிறாய் भणसि भणथः भणथ। यथा भणसि तथा எப்படிச் சொல்கிறாயோ அப்படி दिष्टया எதிர்பாராதவிதமாக अभिनिवेशः உள்ளக்கிடக்கை अनुरूपः (உனக்குத்) தகுந்தது उज्झित्वा விட்டு விட்டு अविलंबितं தாமதமின்றி निभृतं ரகசியமாக स्निग्धदृष्टिः கனிந்த பார்வை प्रजागरः தூக்கமின்றி விழித்திருத்தல் मदनलेखः காதல் கடிதம் सुमनः பூ देवप्रसादस्य தைவத்தின் பிரசாதம் अपदेशः- சாக்கு प्रापयिष्यामि சேர்ப்பிப்பேன் सुकुमारः प्रयोगः அழகிய ஏற்பாடு नियोगः உத்தரவு विकल्प्यते மாற்றப்படுகிறது पदबन्धनं சொற்கட்டு, கடிதவாசகம் செய்யுள் ललितं எளியது, அழகானது अवधीरणा மறுதளிப்பு भीत பயந்தது वेपते நடுங்குகிறது वेपते वेपेते वेपन्ते, यस्मात् अवधीरण विशंकसे எவரிடமிருந்து மறுதளிப்பு பற்றி கவலைப்படுகிறாயே प्रार्थयिता வேண்டுபவன் ईप्सितः விரும்பப்படுபவன் दुराप சிரமபட்டுக் கிடைப்பவன் (கிடைப்பது எளிதல்ல) निर्वापयिः அணைப்பவள் शारदी ज्योत्स्ना சரத்ருதுவின் நிலா पटान्त

மேலாடையின் நுனி वारयति தடுக்கிறான் नियोजिता (உங்களால்) ஈடுபடுத்தப்பட்டவளாக, உத்தரவிடப்பட்டவளாக लेखवस्तु கடிதப் பொருள், கடித அமைப்பு लेखनसाधनं எழுதும் உபகரணம் वर्णानि निक्षिप எழுத்துக்களைப் பதியவைப்பாய் शृणुतं (இருவர்) கேளுங்கள் शृणु शृणुतं शृणुत. संगतार्थं பொருள் பதிந்ததாக अवहितौ கவனத்துடன் இருப்பவர்களாக स्वः (இருவர்) இருக்கிறோம் अस्मि स्वः. स्मः. निर्घृणः பரிவற்றவன் बलीयः மிக்க பல முள்ளதாக तपति வாட்டுகிறான் तपति तपतः तपन्ति. सहसा வேகமாக उपसर्पति (सर्पतः सर्पन्ति) நெருங்குகிறான் तनुगात्री மெல்லியலாள் अनिशं எப்போதும் दहति எரிக்கிறான் दहति दहतः दहन्ति । दिवसः பகல் शशांकः சந்திரன் ग्लपयति வாட்டுகிறான் ग्लपयति ग्लपयतः ग्लपयन्ति । कुमुद्वती அல்லி ஓடை स्वागतं अविलंबिनो मनोरथस्य தாமத மின்றி வந்த (என் தோழியின்) மனோரதத்திற்கு தங்களுக்கு) நல்வரவாகுக । अयि ! அடியே । हला ! ஏலோய் என்பது போல் சம வயதுள்ளவரை நெருக்கமுள்ளவர் கூப்பிடும் சொல் अभ्युत्थातुं எழுவதற்கு

பயிற்சிகள்:

1. இந்தப் பாடத்தைத் தமிழாக்குக.

2. राजर्षेः मनोरथं, दृष्ट्या, सुमनोभिः, अवधीरणायाः, प्रार्थयिता, लेखवस्तु, निर्घृण, कुमुद्वती இந்தச் சொற்கள் எந்த விபக்தியில் வந்துள்ளன? மற்ற இரு வசனங்களையும் தருக.

3. सिञ्च, भणसि, अस्मि, निक्षिप, अवमन्यसे இந்த வினைச் சொற்கள் எந்த லகாரத்தில் அமைந்துள்ளன? மூன்று புருஷன்களிலும் அந்த லகாரத்தின் ரூபங்களைத் தருக.

4. राजर्षेः अनुकंपनीया, यस्मिन् एषा, मस्याः मनोरथं, संगमे उत्सुकः, श्रिया ईप्सितः, कः इदानीं, वा इति, मदनःत्वां இவைகளை ஸந்தி சேர்த்து எழுதுக

5. तदस्या अभिलाषोऽभिनन्दितुं, मदनलेखोऽस्मै, ईप्सितो जनः, दहत्येव, दिवसो यथा இவைகளை ஸந்தி பிரித்து எழுதுக.

## एकादशः पाठः பாடம் 11

## ஸமாஸங்கள் - தத்புருஷஸமாஸம்

தத்புருஷ ஸமாஸத்தில் இரண்டாவது (பின்னர் வரும்) பதத்தின் பொருள் முக்கியத்துவம் பெறும். இங்கு பொதுவாகக் கூட்டு சேரும் பதங்களில் முன்பதம் விசேஷணமாகவும் பின்பதம் விசேஷ்யமாகவும் அமையும். முன் ஸமாநாதிகரண விசேஷணங்களைக் கற்றோம். ஸமாந அதிகரணம் என்றால் ''அபேத சம்பந்தத்துடன் இணைகிற'' என்று பொருள்.

| | | |
|---|---|---|
| उन्नतः पर्वतः | शीतलं जलं | मधुरं गीतं |
| உயர்ந்த மலை | குளிர்ந்த நீர் | இனிய பாட்டு |

இங்கு उन्नतः शीतलं मधुरं என்ற மூன்றும் ஸமாநாதிகரண விசேஷணங்கள் ஆகும். உயர்ந்த என்றும் மலை என்றும் குறிப்பிடுவது ஒரே பொருள். குளிர்ந்த என்றும் நீர் என்றும் குறிக்கப்படுவது ஒன்றே. இனிய என்றும் பாட்டு என்றும் குறிக்கப்படுவது ஒன்றே. வேறல்ல. இவைகளுக்கு இடையே அபேத ஸம்பந்தமுள்ளது. அதனால் ஸமாநாதிகரண ஸம்பந்தம் உள்ளவை. இந்த விசேஷணங்கள் விசேஷ்யத்தின்லிங்க விபக்தி-வசனங்களுடன் ஒன்றுபடும் என்று அங்கு படித்தோம்.

நகரத்திலிருந்து வந்தவன், கிராமத்திலிருந்து வந்தவன், என் தந்தை, உன் தந்தை, சென்னையில் வசிப்பவன், மதுரையில் வசிப்பவன் என்ற சொற்றொடர்களில் ''நகரத்திலிருந்து'' ''கிராமத்திலிருந்து'' போன்ற சொற்கள் ''வந்தவன்'' ''தந்தை'' போன்ற விசேஷ்யங்களைப் பாகுபடுத்திக் காட்டுகின்றன. அவைகளால் குறிக்கப்படும் பொருளும் ஒன்றல்ல. அவைகளுக்கு இடையே பேத சம்பந்தம் நிலவுகிறது.

அந்த பேத சம்பந்தங்களே அங்குள்ள 5-6-7ம் வேற்றுமைகளால் காட்டப்படுகின்றன அதனால் ''நகரத்திலிருந்து. என், சென்னையில்'' என்பவை வ்யதிகரண விசேஷணங்கள். இத்தகைய வ்யதிகரண விசேஷணங்களைக்

கொண்டு அமைவது தத்புருஷ ஸமாஸம். இனி 2ம் வேற்றுமை யிலிருந்து 7ம் வேற்றுமை வரையிலுள்ள விசேஷணங்களைக் கொண்டு அமைந்த உதாரணங்களைக் காண்போம்.

1 ग्रामं प्राप्तः - ग्राम + प्राप्त = ग्रामप्राप्तः

*கிராமத்தை அடைந்தவன்.*

2 खड्गेन छिन्नः - खड्ग + छिन्न = खड्गच्छिन्नः

*கத்தியால் துண்டிக்கப்பட்டது.*

3 विवाहाय कामयानं - विवाह + कामयान = विवाहकामयानं

*திருமணத்திற்காகப் பந்தல்.*

4 समुद्रात् आनीतं - समुद्र + आनीत = समुद्रानीतं

*கடலிலிருந்து கொணரப்பட்டது.*

5 त्यागराजस्य कीर्तनं - त्यागराज + कीर्तन = त्यागराजकीर्तनं

*தியாகராஜரின் பாட்டு*

6 संगीते निपुणः - संगीत + निपुण = संगीतनिपुणः

*இசையில் வல்லவன்.*

இவைகளை முறையே द्वितीयातत्पुरुषः, तृतीयातत्पुरुषः, चतुर्थीतत्पुरुषः, पञ्चमीतत्पुरुषः, षष्ठीतत्पुरुषः, सप्तमीतत्पुरुषः என்று கூறுவர். முதல் வேற்றுமையிலுள்ள விசேஷணங்களைக் கொண்டு प्रथमातत्पुरुष ஸமாஸம் அமைக்க முடியாது. முதல் வேற்றுமையில் உள்ள விசேஷணம் (उन्नतः पर्वतः முதலிய இடங்களில்) அபேத சம்பந்தத்தைக் குறிக்குமல்லவா ! ஸமானாதிகரண விசேஷணமாயிற்றே. !

மேலே வரும் சொற்றொடர்களைக் கவனியுங்கள்.

१. पूर्वं कायस्य-पूर्व + काय = पूर्वकायः

மேலுடல் (இடுப்பிற்கு மேல்)

२. अपरं कायस्य-अपर + काय = अपरकायः

*கீழுடல் (இடுப்பிற்கு கீழ்)*

३. उत्तरं कायस्य-उत्तर + काय = उत्तरकायः

*மேலுடல் (இடுப்பிற்கு மேல்)*

४. पूर्वं रामायाणस्य-पूर्व + रामायण = पूर्वरामायणं

*முன் ராமாயணம் (1-6 காண்டம்)*

५. उत्तरं रामायणस्य-उत्तर + रामायण = उत्तर रामायणं

*பின் ராமாயணம் (7ம் காண்டம்)*

६. पूर्वं अह्नः-पूर्व + अहन् = पूर्वाह्णः *முற்பகல்*

७. अपरं अह्नः-अपर + अहन् = अपराह्णः *பிற்பகல்*

८. उत्तरं अहः-उत्तर + अहन् = उत्तराह्णः *பிற்பகல்*

९. मध्यं अह्नः-मध्य + अहन् = मध्याह्नः *நடுப்பகல்*

१०. अर्धं नारिकेलस्य-अर्ध + नारिकेल = अर्धनारिकेलं

*சிறிய தேங்காய்*

११. अर्धं आहारस्य-अर्ध + आहार - अर्धाहारं

*சிறிது உணவு, சிற்றுண்டி*

१२. अर्धं विलोकितस्य-अर्ध + विलोकित - अर्धविलोकितं

*குறைந்த பார்வை*

*குறிப்பு இங்கு 10-12ல்* **अर्ध** *என்ற சொல் நபும்ஸகத்தில் உள்ளது. அதற்கு 'சற்றேறக்குறைய' – 'சிறிது' என்று பொருள்.* **अर्धः** *என புல்லிங்கச் சொல்லும் உண்டு. அதற்குச் சரிபாதி 50/50 என்று பொருள். இங்கு நபும்ஸகச் சொல்லுடன் உள்ள ஸமாஸமே குறிக்கப்பட்டுள்ளது. அந்தச் சொல்லுக்குத் தான் மேற்கூறியவாறு ஸமாஸம் உண்டு.*

*மேற்குறிப்பிட்ட வாக்யங்களில்* **पूर्वः, अपरः** *போன்ற முதலில் வரும் சொற்கள் பின்னர் வரும் சொற்களுக்கு விசேஷணங்கள்போல் கருதப்படுகின்றன. அவை விசேஷ்யத்தைச் சிறப்பித்தும் சுட்டியும் பாகுபடுத்தியும் காட்டுகின்றன அல்லவா? அவை முதல் வேற்றுமையில் உள்ளன. விசேஷ்யங்களான* **कायस्य, रामायणस्य** *முதலியவை 6ம் வேற்றுமையில் உள்ளன. அதனால் இரண்டிற்கும் அபேத*

ஸம்பந்தம் இல்லை. எனவே இவ்வகை விசேஷ ஸமாஸத்தை பிரதமா தத்புருஷஸமாஸம் என்று கூறுவதுண்டு.

अर्धः என்ற புல்லிங்கச் சொல் ஸமாஸத்தில் இணையும் விதம் பின்வருமாறு:

ग्रामस्य अर्धः-ग्राम + अर्ध = ग्रामार्धः கிராமத்தின் சரிபாதி

शरीरस्य अर्धः-शरीर + अर्धः = शरीरार्धः உடலில் சரிபாதி

இது ஷஷ்டீதத்புருஷஸமாஸமே.

பின்வரும் சொற்றொடர்களைக் கவனியுங்கள்.

न धर्मः-अ + धर्म = अधर्मः தர்மமல்லாதது

न सत्यं-अ + सत्य = असत्यं மெய்யல்லாதது

न न्याय्यं-अ + न्याय्य = अन्याय्यं நியாயமற்றது

न खण्डः-अ + खण्ड = अखण्डः

துண்டமற்றது (பூரணமானது)

न पूर्वः-अ + पूर्व = अपूर्वः முந்தியதல்லாத (புதிய)

न कार्यं-अ + कार्य = अकार्यं செய்யத்தகாத

न उचितं-अन् + उचित = अनुचितं தகுந்ததல்லாத

न उष्णं-अन् + उष्ण = अनुष्णं சூடற்றது

'ந' என்பது அவ்யயம். இது விசேஷணமல்ல. இது விசேஷ விதியால் விசேஷணம் போல் ஆகிறது. அதனால் நஞ்தத் புருஷ ஸமாஸம் என்பர். 'न' என்ற சொல்லைக் குறிக்கும் சொல் நஞ். மெய்யெழுத்தில் தொடங்கும் சொற்கள் மேலே வந்தால் न விலுள்ள 'ந' மறைந்து 'அ' மிகுதியாகிறது. உயிர் எழுத்தில் தொடங்கிய சொற்கள் பின் வரும்போது ந (ந்அ) வானது அந் ஆகிறது. (न धर्मः अधर्मः, न उष्णं अनुष्णं) ஆக தத்புருஷஸமாஸம் எட்டு வகைப்படுகிறது.

கவனிக்கவும்: 1 ग्रामं प्राप्तः - ग्राम + प्राप्त – ग्रामप्राप्तः என்று கொடுக்கப்பட்டுள்ளதில் ग्रामं प्राप्तः என்பது விக்ரஹ வாக்யம்.

அது இணையும்போது ग्राम + प्राप्त என இரண்டு பதங்களிலுமுள்ள வேற்றுமை உருபுகள் மறைந்து பகுதிகள் மட்டும் எஞ்சி நிற்கின்றன. பிறகு ग्रामप्राप्त என இணைந்து ஒரு பதமாகி பகுதியானதும் அதன் மேல் தகுந்த முதல் வேற்றுமை உருபு மீண்டும் சேர்க்கப்பட்டு ग्रामप्राप्तः என ஸமஸ்தபதம் தோன்றியுள்ளது. முன்பத (पूर्वपद)த்திலுள்ள வேற்றுமை உருபு மறைவது இயல்பானது. உத்தர பதத்தில் வேற்றுமை உருபு ஏன் மறைய வேண்டும் என்ற சந்தேகம் எழுக்கூடும். தற்போது ஏற்றுக்கொள்ளுங்கள். இரண்டு பாடங்களுக்குப் பிறகு விளக்கம் தருவோம்.

2 रामानुजस्य ராமனது தம்பியின். रामस्य अनुजः, राम + अनुज – रामानुजः என முதல் வேற்றுமை உருபு பெற்ற ஸமஸ்தபதம் இதன் 6ம் வேற்றுமை रामानुजस्य. இங்கு रामानुजः என்பதன் மேல் 6ம் வேற்றுமையைக் காட்ட ஒரு முறை உண்டு. தேவையான வேற்றுமை உருபை (स्य) நேரே சேர்க்க முடியாது. அதை तत् என்ற ஆதாரத்தின் மேல் ஏற்றி எடுத்துச் சென்று रामानुज என்ற பகுதிச் சொல்லுடன் இணைத் துவிட்டு ஆதாரத்தை உருவி எடுத்துவிட வேண்டும். स्य என்ற விகுதியை तत् என்ற பகுதியில் ஏற்றி तस्य என்பதை रामानुजः + तस्य என்ற நிலையில் இணைத்து रामानुज பகுதியுடன் இணைத்து வேற்றுமை உருபையும் तस्य விலுள்ள तत् என்ற பகுதியையும் உருவி எடுத்துவிட வேண்டும். स्य என்பது रामानुज என்பதன் பின் இணைந்து रामानुजस्य என ஆகும். रामानुजः + तं — रामानुजं, रामानुजः + तेन — रामानुजेन, रामानुजः+ तस्मै — रामानुजाय, रामानुजः + तस्मात् — रामानुजात्, रामानुजः + तस्मिन् — रामानुजे । எனவே तत् சப்தத்தின் 3 லிங்கத்திலுள்ள சப்தரூபங்கள் மனப்பாடமாக இருப்பது மிக அவசியம்.

பயிற்சி: தமிழில் மொழிபெயர்த்து எழுதுக:

अद्यत्वे एतत्पक्षाश्रिताः राज्यं पालयन्ति। अन्यकक्ष्याश्रिता विपक्षे वर्तन्ते।

भिषक् रोगिणे सूचिकावेधं ददाति, तदा क्षणदुःखं भवति।

वयोतीताः अधिकारिणः रेल्वेनिर्वाहात् निर्गमिताः।

रामायणं वाल्मीकिविरचितं आदिकाव्यम्।

न हि रामसमः कश्चित् वर्तते त्रिदशेष्वपि। (वा. रा.)

उपलमिश्रा एव तण्डुलाः आपणेषु विक्रीयन्ते।

विधानसभासु प्रतिनिधयः वाक्कलहं कुर्वन्ति।

अद्य अनावृष्ट्या दुर्भिक्षभयं उत्पश्यन्ति राजकीयाः।

गते मासे देवालयेषु कृत्तिकोत्सवः प्राचलत्।

लक्ष्मणाग्रजः जनकसुतया सह पितुराज्ञया वनं गतः।

ताम्रपात्रस्थितं क्षीरं विषं भवति।

तुंबुरुनारदौ सङ्गीतनिपुणौ।

सर् सि वि रामः विज्ञानकुशलः।

कुन्तीपुत्रः कर्णः दानवीरः।

अर्धमार्गे वृष्टिभयात् अहं प्रतिनिवृत्तः।

अनृतवचनं अविश्वासाय कल्पते। *(कल्पते காரணமாகிறது)*

सीताहरणं महान् अधर्मः इति मारुतिः रावणं अबोधयत्।

अर्धनारिकेलं शाकाय सज्जीकुरु।

पार्वती प्रेम्णा शङ्करस्य शरीरार्धं जहार।

*கோடிட்ட பதங்கள்* तत्पुरुषमास*த்தின் உதாரணங்கள். விக்ரகவாக்யங்கள் தரப்பட்டுள்ளன. கவனித்துப் படியுங்கள். விதிகளுடன் ஒப்பிட்டுப்பாருங்கள்.*

एतं पक्षं आश्रिताः। अन्यकक्ष्यां आश्रिताः। सूचिकया वेधः सूचिकावेधः + तं सूचिकावेधं। क्षणं दुःखं। वयः अतीताः। वाल्मीकिना

विरचितं। राभेण समः। उपलैः मिश्राः। विधानाय सभाः विधानसभाः + तासु विधानसभासु। वाचा कलहः वाक्कलहः + तं। न आवृष्टिः अनावृष्टिः + तया। दुर्भिक्षात् भयं दुर्भिक्षभयं + तत्। न लाभः अलाभः, अलाभेन भीताः अलाभभीताः। देवानां आलयाः देवालयाः + तेषु। कृत्तिकाया उत्सवः। लक्ष्मणस्य अग्रजः। जनकस्य सुता जनकसुता + तया। ताम्रपात्रस्थितं ताम्रपात्रस्थितं। संगीते निपुणौ। विज्ञाने कुशलः। दाने वीरः। अर्धं मार्गस्य अर्धमार्गः + तस्मिन्। वृष्टेः भयं वृष्टिभयं तस्मात्। न ऋतं अनृतं, अनृतस्य वचनं अनृतवचनं। न विश्वासः अविश्वासः तस्मै। सीतायाः हरणं सीताहरणं। न धर्मः। अर्धं नारिकेलस्य अर्धनारिकेलः तं। शरीरस्य अर्धः शरीरार्धः तं।

*கேள்விகள்:*

1. दुर्भिक्षभयं *என்ற ஸமாஸ பதத்துடன்* 'तत्' *சேர்க்கப் பட்டிருப்பது ஏன்?* ताम्रपात्रस्थितं *என்பதுடன்* तत् *சேர்க்கப்படவில்லை ஏன்!*

2. अर्धमार्गः, अर्धनारिकेलः, शरीरार्धः *என்ற பதங்களில் ஸமாஸ வேற்றுமைகள் ஏற்பட்டிப்பது எதனுல்? பொருளில் சூக்ஷ்மமான வேறுபாடுண்டு. அது என்ன?*

*கடினப்பதப்பொருள்கள்:*

अयत्वे *இன்றளவில்* विपक्षः *எதிர்கட்சி* सूचिकावेधः *ஊசிகுத்துதல், இஞ்செக்ஷன்* त्रिदशाः *தேவர்கள்* उपलः *கல்* उत्पश्यन्ति *எதிர்பார்க்கிறார்கள்* सञ्चिन्वन्ति *சேமிக்கிறார்கள்.*

## द्वादशः पाठः - பாடம் 12

# संक्षिप्तं अभिज्ञानशाकुन्तलम् -१०

### षष्ठं दृश्यम् (अनुवर्तते)

राजा-(शकुन्तलां उत्थानात् वारयन्) अलमलं आयासेन। ते गात्राणि गुरुपरितापानि। तानि आयासं नार्हन्ति।

अनसूया-इतः उपविशतु वयस्यः। (राजा उपविशति। शकुन्तला सलज्जा तिष्ठति)

प्रियंवदा-राजन् ! युवयोः द्वयोरपि अन्योन्यं अनुरागः प्रत्यक्षः । तथापि सखीस्नेहः मां चोदयति-राज्ञा आर्तिहरेण भवितव्यम् । एष वो धर्मः । इयं आवयोः प्रियसखी त्वां उद्दिश्य इमां अवस्थां प्राप्ता । अस्याः जीवितं रक्षणीयम् ।

राजा-भद्रे, ममापि साधारणोऽयं प्रणयः । सर्वथा अनुगृहीतः अस्मि । इदं हृदयं अनन्यपरायणम् ।

अनसूया-वयस्य ! राजानो बहुवल्लभाः श्रूयन्ते । आवयोः सखी बन्धुभिः शोच्या न भवंतु् । तथा निर्वाहय ।

राजा-भद्रे ! किं बहुना । मम परिग्रहा बहवः । तथापि मे कुलस्य द्वे प्रतिष्ठे । एका इयं उर्वी, इयं च युवयोः सखी ।

सख्यौ-निर्वृते स्वः ।

वारयन् *தடுப்பவராக* आयासः *உடல் வருத்தம்* गात्रं *உடல், உடலுறுப்பு* गुरुपरितापं *அதிக வேதனையுள்ளது* चोदयति *தூண்டுகிறது* चोदयति चोदयतः चोदयन्ति । आर्तिहरः *வேதனையைப் போக்குபவன்* राज्ञा....... भवितव्यम् *அரசர் மக்களின் வேதனையைப் போக்குபவராக இருக்கவேண்டும்* ममापि... प्रणयः *எனக்கும் பொதுவான அன்பு வேண்டுகோள் (நானும் அவ்விதமே கோருகிறேன் எனப்பொருள்)* अनन्यपरायणं *வேறொருவரிடத்தில் ஈடுபாடற்றது* (परं अयनं, परायणं *முக்கிய நோக்கு, ஈடுபாடு* न अन्यस्मिन् परायणं) बहुवल्लभाः *அநேக மனைவியர் (நாயகிகள்) உள்ளவர்* (बह्व्यः वल्लभाः यस्य) शोच्या *வருந்தத்தக்கவள்* निर्वाहय *பொறுப்புடன் நடத்திக்கொடுப்பீர்* परिग्रहः *கைத்தலத்தால் பற்றிய மனைவி* प्रतिष्ठा *ஆதாரம்* उर्वी *பூமி, அரசு* निर्वृता *நிம்மதியுற்றவள்.*

*பயிற்சிகள்:*

*1. இந்தப் பாடத்தைத் தமிழில் மொழி பெயர்க்கவும்.*

2. आयासं, आर्तिहरेण, राज्ञा, परिग्रहाः, प्रतिष्टे இவைகள் அமைந்த விபக்தியின் மற்ற இரு உருவங்களைத் தருக.

## त्रयोदशः पाठः - பாடம் 13

## புல்லிங்கமும் ஸ்திரீலிங்கமும்

ஆண்பாலைக் குறிப்பது புல்லிங்கம். பெண்பாலைக் குறிப்பது ஸ்திரீலிங்கம். ஆணும் பெண்ணுமாகக் குறிப்பிட முடியாதவற்றைக் குறிப்பிடுவது நபும்ஸகலிங்கம். இது பொதுவிதி. மிகச்சில தனிப்பட்ட சொற்கள் புல்லிங்கமாயினும் நபும்ஸகமாயினும் பெண்பாலைக் குறிக்கும். உதாரணம் दाराः மனைவி. இந்தச் சொல் புல்லிங்கம். எப்போதும் பன்மையிலே வரும். பன்மையில் கூறினாலும் ஒரு மனைவியையும் குறிக்கும். இரு மனைவிகளையும் பல மனைவிகளையும் दाराः என்றே குறிப்பிடலாம். அந்த மாதிரி कलत्रं நபும்ஸகலிங்கச்சொல். ஆனால் மூன்று வசனங்களிலும் வரும். பொதுவாக ஆண்பால் பெண்பால் இரண்டுமுள்ள சில சொற்களை இங்கு கவனிப்போம். இவைகளில் சில பெண்பால் சொற்கள் மாறுபட்ட அல்லது தனிப்பட்ட பொருள் கொண்டதையும் காண்போம். अजः ஆண் ஆடு अजा பெண் ஆடு. மாறுபட்ட பொருளுள்ளதை ஆங்காங்கு விவரிப்போம்.

ஆடு अजः अजा

குதிரை अश्वः अश्वा

மற்றொருவன் अन्यः अन्या

ஆசிரியன் आचार्यः ஆசிரியை आचार्या ஆசிரியனின் மனைவி आचार्याणी

ஆசிரியர் उपाध्यायः ஆசிரியை उपाध्याया उपाध्यायी உபாத்தியாயரின் மனைவி उपाध्यायिनी

நீண்ட ஆயுள் உள்ளவன் आयुष्मान् आयुष्मती

இந்திரன் इन्द्रः இந்திரனின் மனைவி इन्द्राणी

ஒட்டகை उष्टः उष्ट्री

அடைந்தவன் उपेयिवान् उपेयुषी

ஆசைப்படுபவன் कामुकः, காம இச்சை கொண்டவள் कामुकी, பொருளாசை கொண்டவள் कामुका

செய்பவன் कर्ता कर्त्री

க்ஷத்திரியன் क्षत्रियः, க்ஷத்திரியப்பெண் क्षत्रिया, क्षत्रियाणी க்ஷத்திரியனை மணந்த வேறு இனத்தைச் சார்ந்தவள் क्षत्रियी

யானை गजः गजी

அதிகப்பெரியவன் गरीयान् गरीयसी

செல்பவன் गन्ता गन्त्री

சென்றுகொண்டிருப்பவன் गच्छन् गच्छन्ती

பெரியவன், கனத்தவன் गुरुः गुर्वी (गुरुः என்றும் ரூபம்)

குணமுள்ளவன் गुणी गुणिनौ

மாடு மேய்ப்பவன் गोपः மாடு மேய்ப்பவள் गोपा மாடு மேய்ப்பவனின் மனைவி गोपी

மாடு மேய்ப்பவன் गोपालः गोपाला गोपाली (மனைவி)

திருடுகின்றவன் चोरयन् चोरयन्ती

சிட்டுக்குருவி चटकः चटका

நரி जंबुकः जंबुका

நகரத்தான் जानपदः जानपदा (जानपदी)

யுவன் तरुणः तरुणी

இளைத்தவன் तनुः तन्वी (तनुः)

நின்றவன் तस्थिवान् तस्थुषी

கொடுக்கிறவன் ददत् ददती

தடிபிடித்தவன் दण्डी दण्डिनी

அடிமை दासः दासी

கொடுக்கிறவன் दिशन् दिशन्ती

மனிதன் नरः (नारः) மனுஷி नारी

நடனம் புரிபவன் नर्तकः नर्तकी

கீரி नकुलः नकुली

யானை, பாம்பு नागः, नागा (नागी)

தலைவன் नेता नेत्री

திறமையுள்ளவன் पटुः पट्वी (पटुः)

கணவன் पतिः மனைவி पत्नी

தகப்பன் जनकः தாய் जननी

தந்தையின் தந்தை पितामहः தந்தையின் தாய் पितामही

தாயின் தந்தை मातामहः தாயின் தாய் मातामही

## चतुर्दशः पाठः - பாடம் 14

## कर्मधारयसमासः

தத் புருஷஸமாஸம் வியதிகரண விசேஷணங்களைக் கொண்டு அமைந்ததைக் கற்றோம். அந்த விசேஷணங்களே ஸமாநாதிகரணங்களாக அமைவது கர்மதாரயம். ஸமாநாதி கரணம். வியதிகரணம் என்ற சொற்களின் பொருள்பற்றி 11 வது பாடத்தின் தொடக்கத்தில் கொடுக்கப்பட்ட குறிப்புகளைக் கவனிக்கவும். நீலக்கடல், செவ்வானம், சிறு துளி, பெரு வெள்ளம் முதலியவை இதற்கு உதாரணங்கள். இது ஏழு வகைப்படும். அவைகளை வரிசையாகக் காண்போம்.

1. விசேஷண-பூர்வபத-கர்மதாரயம்: இதில் விசேஷணம் முதல் பதமாகவும் விசேஷ்யம் பின்பதமாகவும் அமையும். இரண்டும் அபேத சம்பந்தத்தால் இணைந்திருக்கும்.

१. नीलं + उत्पलं = नीलोत्पलं நீலநிறமுள்ள அல்லி

२. पीतं + अंबरं = पीतांबरं மஞ்சள் நிறமுள்ள ஆடை

३. उष्णं + उदकं = उष्णोदकं சூடான நீர்

४. कठिना + शिला = कठिनशिला கடினமான பாறை

५. दरिद्रः + याचकः = दरिद्रयाचकः ஏழையான யாசகன்

६. पक्कानि + फलानि = पक्कफलानि பழுத்த பழங்கள்

७. रक्ता + मञ्जरी = रक्तमञ्जरी சிவந்த பூங்கொத்து

८. मधुरा + कविता = मधुरकविता இனிய கவிதை

९. विकसन्ती + जाती = विकसज्जाती
மலர்ந்துகொண்டிருக்கிற ஜாதிப்பூ

१०. बृहती + कथा = बृहत्कथा பெருங்கதை

११. प्रवहन्ती + नदी = प्रवहन्नदी
பெருகிக்கொண்டிருக்கும் ஆறு

குறிப்பு: ஸ்திரீலிங்கத்திலோ நபும்ஸகலிங்கத்திலோ வரும் விசேஷணங்கள் பும்லிங்கப்பகுதிகளாக மாறுகின்றன. நபும்ஸகலிங்கத்தில் உள்ள விசேஷணங்களில் வேறுபாடு தெரிவதில்லை. ஸ்திரீலிங்கத்தில் உள்ள விசேஷணங்களில் மட்டும் வேறுபாடு தெரியும்.

2. விசேஷண - உத்தரபத - கர்மதாரயம்: இதில் விசேஷணம் முன்பதமாக அமைகிறது. இப்படி வரும் விசேஷணங்கள் பெரும்பாலும் இழிவையும் வெறுப்புணர்ச்சியையும் வெளியிடும். ராமுத்தடியன் எங்கே? வேலைக்காரக்கிழவன் எங்கே தொலைந்தான்? என்பதுபோல் இவை அமையும். இழிவையோ வெறுப்புணர்ச்சியையோ குறிப்பிடாதவரை விசேஷணங்கள் முன்பதமாகத்தான் அமையும்.

| விசேஷணம் பூர்வபதம் | பொருள் | விசேஷணம் பின்பதம் |
|---|---|---|
| दुष्टः सर्पः-दुष्टसर्पः | பொல்லாத பாம்பு | सर्पः दुष्टः-सर्पदुष्टः |
| हतकः विधिः- हतकविधिः | பாழும் விதி | विधिः हतकः-विधिहतकः |

खसूचिः वैयाकरणः खसूचिवैयाकरणः வானம் பார்க்கும் இலக் கணமாணவன் वैयाकरणः खसूचिः वैयाकरणखसूचिः. கேள்விக்குப் பதில் தெரியாமல் வானம் பார்த்து யோசிக்கும் மாணவன்-நன்கு படிக்காதவன் என்ற பொருளில். वैयाकरण-खसूचिः)

3. விசேஷண-உபயபத-கர்மதாரயம்: இதில் இரண்டு பதங்களுமே விசேஷணங்களாய் இருக்கும்.

१. लिखितं पठितं-लिखितपठितं (पुस्तकं)
*எழுதிப்படிக்கப்பட்டது (நூல்)*

२. तप्तं शीतं-तप्तशीतं (जलं)
*காய்ச்சி ஆற்றப்பட்ட (ஜலம்)*

३. पिष्टं शोषितं-पिष्टशोषितं (औषधं)
*பொடித்துக் காயவைக்கப்பெற்ற (மருந்து)*

४. प्रच्छाय शीतलं-प्रच्छायशीतलं (वृक्षमूलं)
*நிழல் நிறைந்து குளிர்ந்த (மரத்தடி)*

५. अस्तं व्यस्तं-अस्तव्यस्तं *சிதறிய சிதறிய (மிகவும் சிதறிய)*

६. दीनः दीनः-दीनदीनः *எளிய எளிய-மிக எளிய*

७. भीतः भीतः-भीतभीतः *பயந்த பயந்த-மிகப் பயந்த*

குறிப்பு: இங்கு முன் காட்டியது போல் முன்பதத்தின் பொருளோ பின்பதத்தின் பொருளோ முக்யம் (விசேஷ்யம்) அல்ல. இரண்டுமே விசேஷணங்கள் தான்.

4. உபமான-பூர்வபத-கர்மதாரயம்: இதில் முன்பதம் உவமைப் பொருளாயும் பின்பதம் உவமைக்குரிய தன்மையை (சிறப்புக்குணத்தை)க் கூறுகின்ற விசேஷணமாகவும் அமையும்.

मेघः इव श्यामः-मेघश्यामः மேகம் போல் கருத்த

द्राक्षा इव मधुरा-द्राक्षामधुरा திராக்ஷை போல் இனிய

मरकतं इव श्यामा-मरकतश्यामा பச்சைக்கல்போல் பசுமையான

शिला इव कठिना-शिलाकठिना பாறைபோல் இறுகிய

हिम इव शीतलं-हिमशीतलं பனிபோல் குளிர்ந்த

गगनं इव विशालं-गगनविशालं *வானம்போல் விரிந்த*

5. உபமான-உத்தரபத-கர்மதாரயம்: *முன்பதம் உவமைக் குரிய பொருளாகவும் பின்பதம் உவமையாகவுமிருக்கும்.*

रामः चन्द्रः इव-रामचन्द्रः *சந்திரன் போன்ற ராமன்*

नरः सिंहः इव-नरसिंहः *சிங்கம் போன்ற மனிதன்*

राजा सिंहः इव-राजसिंहः *சிங்கம் போன்ற அரசன்*

गोविन्दः सिंहः इव-गोविन्दसिंहः *சிங்கம் போன்ற கோவிந்தன்*

अर्जुनः सिंहः इव-अर्जुनसिंहः *சிங்கம் பேன்ற அர்ஜுனன்*

*முதற்பகுதி பெயர். பிற்பகுதி சிறப்பைக் காட்ட சிங்க உவமைச்சொல். சிறந்தவரைக் குறிக்க வந்த 'ஸிம்ஹ' என்ற சொல் சீக்கியர் முதலானோரின் ஜாதி அடையாளச் சொல்லாகவும் உள்ளது.*

चरणं अरविन्दं इव-चरणारविन्दं *தாமரை போன்ற திருவடி*

करः किसलयः इव-करकिसलयः *தளிர் போன்ற கை*

मुखं पद्मं इव-मुखपद्मं *தாமரை போன்ற முகம்*

मुखं चन्द्रः इव-मुखचन्द्रः *சந்திரனைப் போன்ற முகம்*

वाहुः दण्डः इव-बाहुदण्डः *தடி போன்ற கை*

*இங்கும் பின்பதத்தின் பொருள் முக்கியத்துவம் பெறவில்லை.*

6. ஸம்பாவநா-பூர்வபத-கர்மதாரயம்: *முன்பதம் இடுகுறிப் பெயராகவும் பின்பதம் பொதுப்பெயராகவும்* (Name and Common Noun) *இருக்கும்.*

१. रघुवंशः इति काव्यं-रघुवंशकाव्यं *ரகுவம்சம் என்ற காவியம்*

२. मथुरा इति पुरी-मथुरापुरी *மதுரை எனும் நகர்*

३. अश्वत्थः इति वृक्षः-अश्वत्थवृक्षः *அச்வத்தம் (அரசு) என்ற மரம்*

४. यूरोपः इति देशः-यूरोपदेशः *யூரோப்பா என்ற தேசம்*

५. यमुना इति नदी-यमुनानदी *யமுனை என்ற ஆறு*

६. हिमवान् इति पर्वतः-हिमवत्पर्वतः *இமயம் எனும் மலை*

७. प्रयागः इति क्षेत्रं-प्रयागक्षेत्रं *பிரயாகை எனும் தலம்*

௮. लङ्का इति द्वीपः - लङ्काद्वीपः இலங்கை எனும் தீவு

7. அவதாரணு-பூர்வபத-கர்மதாரயம்: இவ்வகையில் உபமேயச் சொல்லுடன் உபமானச் சொல் இணைகிறது. ஐந்தாவதாகக் குறிப்பிட்ட உபமான-உத்தரபத- கர்மதாரயத் திலும் இவ்வாறே இணைந்தன. ஆனால் அங்கு इव (போன்ற) என்பது இடைச்சொல்லாக வந்தது. இங்கு एव (ஆகிய) என்பது இடைச்சொல்லாக வரும். அங்கு உவமையணி முக்கியமாய் தோன்றும். இங்கு உருவக (ரூபக) அணி முக்கியமானது.

உதாரணம்—

रामः एव चन्द्रः-रामचन्द्रः ராமனாகிய சந்திரன்

मुख एव चन्द्रः-मुखचन्द्रः முகமாகிய சிந்திரன்

चरणः एव कमलं-चरण कमलं திருவடித்தாமரை

இவ்வுதாரணங்களில் ஒற்றுமையில் சிறப்பைக் காட்ட ஆகிய' என்ற இடைநிலை வருகிறது. லஞ்சப்பேய், மது வரக்கன், பசிப்பிணி. இசையமுதம் போன்றவைகள் வழக்கிலுள்ளவை இதன் உதாரணங்கள். இங்கு इव (போன்ற) இடைநிலையை உபயோகித்தாலும் இதே ஸமாஸ பதம் கிடைக்கும். ஆனால் மாற்றுக்குறைவு. இந்த வேற்றுமையை வாக்கியத்தின் அமைப்பைக் கொண்டு அறிய முடியும்.

உதாரணம்: 1 சரண கமலங்களில் வணங்கினேன் என்றால் इव தான் இடைநிலை. நாம் தாமரையை வணங்கவில்லை. தாமரை போன்ற திருவடிகளைத்தான் வணங்குகிறோம். இங்கு உவமையணி. 2 சரண கமலங்களில் வண்டானேன் என்றால் एव தான் இடைநிலை. வண்டு காலைச் சுற்றாது. தாமரையைத்தான் சுற்றும். திருவடிகளாகிற தாமரை என அங்கு உருவக அணி (ரூபக அலங்காரம்)

இவ்வாறு வாக்கிய அமைப்பைக் கொண்டு உபமித ஸமாஸத்தையும் ரூபக ஸமாஸத்தையும் (வகை 5,7) நாம் பகுத்தறிய வேண்டும்.

वाल्मीकिगिरिसंभूता रामसागरगामिनी ।
पुनाति भुवनं पुण्या रामायणमहानदी ॥

*இது பிரார்த்தனை ச்லோகம். இதன் விளக்கம்.*

वाल्मीकिगिरेः संभूता रामसागरं गच्छन्ती पुण्या रामायण महानदी भुवनं पुनाति *வால்மீகியாகிய மலையிலிருந்து தோன்றிய-ராமனாகிய கடலைச் சென்றடைகின்ற-புனிதமான-ராமாயணம் ஆகிய பேராறு உலகைப் புனிதமாக்குகிறது எனப்பொருள். இங்குள்ள* वाल्मीकिगिरिसंभूता, रामसागरगामिनी, रामायणमहानदी *என்ற மூன்று சொற்களும் ஏழாம் வகை கர்மதாரய ஸமாஸத்தால் அமைந்த பதங்கள்.* वाल्मीकिरेव गिरिः (तस्मात्संभूता) राम एव सागरः (तं गामिनी गच्छन्ती) रामायण एव महानदी *என்று இங்கு விக்கிரஹவாக்கியம்.*

*இங்கு புனிதப்படுத்தும் புண்ய நதி என்ற கருத்தில்* एव *என்பது இடைநிலை. அதனால் பின் (உத்தர) பதத்தின் பொருளே முக்கியத்துவம் பெறுகிறது. இதனைப்போல் மற்றதையும் அறிந்துகொள்ளலாம்.*

*பயிற்சி : 1. தமிழில் மொழிபெயர்க்கவும். ஸமஸ்த பதங்களுக்கு விக்ரஹவாக்யம் எழுதவும். பிரிந்திருக்கும் பதங்களுக்கு ஸமாஸம் எழுதவும். ஸமாஸத்தின் பெயரைக் குறிப்பிடவும்.*

१. शिशिरर्तौ उष्णोदकेन स्नातुं इच्छामः।

२. मथुरानगरे लोकतमिलमहासभा प्राचलत्।

३. शुकोदरसुकुमारं नलिनीपत्रम्।

४. सुगन्धिशीतलः मन्दमारुतः तापं शमयति।

५. दृष्टनष्टा विद्युत् नेत्रे पीडयति।

६. गतागतैः बन्धुभिः विवाहमण्टपः निबिडः आसीत्।

७. ह्यः तत्र मधुरं गीतं आकाशवाण्यां अशृणवम्।

८. चैत्रे मासे शुक्लायां नवम्यां पुनर्वसौ नक्षत्रे रामः अवातरत्।

९. सर्पः मृणालशीतलः इति प्रातिवेशिकः वदति।

१०. पलाशस्य कोरकाः बालेन्दुः इव वक्राः इति कालिदासः वर्णयति।

११. पृथिवी न कन्दुकः इव वर्तुला, किन्तु ध्रुवप्रदेशयोः ईषदवघट्टिता इति वैज्ञानिकानां सिद्धान्तः।

१२. सन्तः शैला इव उन्नताः किन्तु न कर्कशाः, ते अतीव मृदवः ।

(शिशिरर्तुः *பின்பனிப்பருவம்* शुकोदरसुकुमारं *கிளியின் வயிறுபோல் மென்மையுள்ளது.* दृष्टनष्टा *பார்க்கப்பட்டு (உடன்) மறைந்தது* गतागताः *செல்பவர்களும் வருபவர்களாயுமுள்ளவர்* निबिडः *நெருக்கமுள்ளது* मृणालं *தாமரைத்தண்டு* प्रातिवेशिकः *எதிர்வீட்டைச் சார்ந்தவர்* प्रतिवेशः *எதிர் வீடு* पलाशः *புரசு* कोरकः *மொட்டு* बाल-इन्दुः *இளம் சந்திரன்* अवघट्टिता *தட்டையாக தட்டப் பட்டது* कर्कशः *முரடர்.*

*பயிற்சி: (1) ஸம்ஸ்க்ருதத்தில் மொழி பெயர்க்கவும். (2) கோடிட்ட எழுத்திலுள்ளவைகளை ஸமஸ்தபதமாக எழுதவும்.*

*1. பால் சங்கு போல் வெண்மையானது*

*2. யானை நீண்ட துதிக்கையால் தென்னை மரத்திலிருந்து மட்டைகளை வீழ்த்துகிறது.*

*3. யானையின் காதுகள் முறம் போல் அகன்றவை*

*4. வாழ்க்கை நீர்குமிழி போல் நிலையற்றது*

*5. வானரர்களில் சிறந்த* (सिंह *அல்லது* शार्दूल *சொல்லைப் பயன்படுத்தவும்) ஹனுமான் ஸீதையை ஸமாதானப் படுத்தினார்.*

*6. ஹனுமான் லங்கா நகரத்தில் சிறந்த பதிவ்ரதையான* (रत्न *என்ற சொல்லைப் பயன்படுத்தவும்) ஸீதையைக் கண்டார்.*

*7. அவன் நலிந்த ஆடைகளை எறிந்து விட்டுப் புதிய ஆடைகளை அணிகிறான்.*

*8. உன் பற்கள் முத்துப் போல் வெள்ளையாக உள்ளன.*

*துதிக்கை* शुण्डा, *மட்டை* पत्रकाण्डं, *முறம்* शूर्पः, *நீர்க்குமிழி* बुदबुदः, *நலிந்த* जीर्ण, *ஸமாதானப்படுத்தினார்* आश्वासयामास, *அணிகிறான்* परिधत्ते ।

*3. வீக்ரஹவாக்யம் எழுதவும். ஸமாஸத்தின் பெயர் எழுதவும்.*

१. पूर्णचन्द्रः २. शुक्लपक्षः ३. कैलासपाण्डरः ४. पीनायतविशालं (उरः) ५. प्रियसुहृत् ६. प्रियसखा ७. कृष्णसर्पः ८. निर्जनप्रदेशः ९. श्यामावदातः १०. निम्नोन्नता (भूमिः)

# पञ्चदशः पाठः பாடம் 15

## द्विगुसमासः

ஸமாநாதிகரண விசேஷணத்தை முதல் பதமாகக் கொண்ட கர்மதாரய ஸமாஸத்தில் முதல் பதம் எண்ணிக் கையைக் குறிக்கும் சொல்லாக அமையுமானல் द्विगुः என்ற விசேஷ பெயரைப்பெறும். எனவே இது கர்மதாரய ஸமாஸத்தின் உட்பிரிவாகும். உதாரணம் மிகவும் குறைவு. सप्तऋषयः = सप्तर्षयः (Seven stars of the Great Bear) ஸப்தரிஷி மண்டலம்.

இதே ஸமாஸம் பல பொருள்களை ஒரு சமுதாயமாக (Collective noun போல்) குறிப்பிடுவதாகவும் அமையும். அப்போது ஸமஸ்த பதம் ஒருமையில் வரும். ஸமாஸமடையும் பதம் ஆண்பால், பெண்பால் நபும்ஸகலிங்கம் எதுவாக இருந்தாலும் ஸமஸ்தபதம் ஸ்திரீலிங்கத்திலோ, நபும்ஸகலிங்கத்திலோ வரும்.

உதாரணம்:

भुवनं (न) त्रयाणां भुवनानां समाहारः = त्रिभुवनं மூவுலகு

लोकः (पुं) त्रयाणां लोकानां समाहारः = त्रिलोकं/त्रिलोकी

गङ्गा (स्त्री) सप्तानां गङ्गानां समाहारः = सप्तगङ्गं

नदी (स्त्री) पंचानां नदीनां समाहारः = पंचनदं ஐயாறு

वटः (पुं) पंचानां वटानां समाहारः = पंचवटी ஐந்து ஆல் (பஞ்சவடி)

नलः (पुं) पंचानां नलानां समाहारः = पंचनली ஐந்து நளர் கூட்டம்

(पंचनली - தமயந்தியின் ஸ்வயம் வரத்தில் அவளை மணக்க ஆசை கொண்டு இந்திரன். அக்னி, யமன், வருணன் ஆக நான்கு தேவர்களும் நளன் வேஷம் பூண்டு நளன் பக்கத்து ஆஸனங்களில் அமர்ந்தார்கள். ஸரஸ்வதிதேவியே மணமக்களுக்கு மண்டபத்தில் உள்ள மன்னர்களின் பெருமை கூறிப் பிடித்திருந்தால் மாலையிடு என்று கூறுகிருள். ஐந்து

நளர்கள் ஒரே தோற்றமாக இருப்பதைக் கண்டு ஐவர்களுடைய பெருமையையும் விளக்கும் வண்ணம் ஐந்து பொருள் தரும் வகையில் அறிமுகம் செய்து வைக்கிறாள். தமயந்தி அந்த தேவர்களையே சரணடைந்து. கற்பின்மேல் ஆணை வைத்து, ஸ்வயரூபம் எடுத்துக் கொள்ளும்படி வேண்டுகிறாள். வேறு வழியின்றி தேவர்கள் தங்கள் ஸ்வயரூபத்தில் தோன்ற தமயந்தி உண்மையான நளனுக்கு மாலையிடுகிறாள் என்பது வரலாறு. ஸ்ரீஹர்ஷர் என்ற கவி தனது நைஷதமஹாகாவ்யத்தில் இந்த கட்டத்தை ஐந்து பொருள் தரும்படி மிக நுட்பமாகப் பாடியிருக்கிறார். அந்த ஸர்கத்துக்கு ''பஞ்சநளீ'' என்று பெயர்.)

## द्वन्द्वसमासः

**उभयपदार्थप्रधानः द्वन्द्वः** இவ்வகை ஸமாஸத்தில் இரு பதங்களின் பொருள்களும் ஸமமான முக்கியத்துவத்தை அதாவது அடுத்த பதத்துடன் இணைவதற்குச் சம உரிமையைப் பெற்றிருக்கும்.

உதாரணம் :

१. **सीतालक्ष्मणौ रामं अनुगच्छतः ।**

*ஸீதையும் லக்ஷ்மணனும் ராமனைப் பின்தொடர்கிறார்கள்.*

**सीता अनुगच्छति लक्ष्मणः अनुगच्छति ।** இருவரும் பின்தொடர்வதில் ஸம உரிமை பெறுகிறார்கள்.

२. **''नमो नमः शंकरपार्वतीभ्याम्'' ।**

*(ஸ்ரீ சங்கரருடைய உமாமஹேசுவர ஸ்தோத்திரம்)*

**शङ्करश्च पार्वती च शङ्करपार्वत्यौ ताभ्यां शङ्करपार्वतीभ्यां** என்பது விக்ரஹவாக்யம். **शङ्कराय नमो नमः पार्वत्यै नमो नमः** என்று நமஸ்காரத்தில் இணைவதற்கு **पार्वती शंकर** என்ற சொற்கள் ஸம உரிமை பெற்றிருக்கின்றன.

குறிப்பு : பாடம் 11ல் விக்ரஹவாக்யத்திலுள்ள இரு பதங்களிலுள்ள வேற்றுமை உருபுகளும் மறைந்து பகுதிகள் இணைந்தபின் ஸமாஸ பதத்தின் பொருளுக்கேற்றவாறு வேற்றுமை உருபுகள் மீண்டும் சேர்க்கப்படுகின்றன என்று கூறினோம். மேலே கொடுத்த உதாரணங்களால் **सीता लक्ष्मणः**,

शंकरः, पार्वती என்ற பதங்களிலுள்ள ஒருமை உருபுகள் மறைந்து सीतालक्ष्मण, शङ्करपार्वती என்று இணைந்ததும், அப்பதத்துக்குப் பொருத்தமான இருமை வேற்றுமை உருபு (ஆண்பாலிலும், பெண்பாலிலும்) முறையே சேர்க்கப்படுகிறதைக் கவனிக்கவும். அடுத்து வரப்போகும் बहुव्रीहि என்ற ஸமாஸத்திலும் ஸமாஸ பதத்துக்குத் தகுந்ததான வேற்றுமை உருபுகள் அமைக்க வேண்டிய அவசியம் வரும். எனவே பொதுவாக ஸமாஸமடையும் பதங்களிலுள்ள வேற்றுமை உருபுகள் மறைந்து விடும் என்று பொதுவிதி கூறப்பட்டது.

இந்த ஸமாஸம் इतरेतर योगद्वन्द्वः समाहारद्वन्द्वः, என்று இருவகைப்படும். தனி முக்கியத்துவம் கொண்டது, கூட்டு முக்கியத்துவம் கொண்டது என்று பொருள். அவ்விரண்டு வகை ஸமாஸங்களும் द्विपद (இரண்டு பதங்களால் ஆனது) बहुपद (பல பதங்களாலானது) என்று இரு வகைப்படும் ஆக द्वन्द्वसमास ம் १. द्विपद इतरेतरयोग द्वन्द्वः २. बहुपद इतरेतरयोग द्वन्द्वः ३. द्विपद समाहारद्वन्द्वः ४. बहुपद समाहारद्वन्द्वः என்று நான்கு வகைப்படும்.

१. द्विपद इतरेतरयोगद्वन्द्वः - இணையும் இரு பதங்களும் ஒருமையில் இருந்தால் ஸமாஸ பதம் (1 + 1) இருமையில் வரும். இணையும் இரு பதங்களும் ஒருமையிலும். இருமையிலுமாய் ஒருமையிலும் பன்மையிலுமாய் இருமையிலும் இருமையிலுமாய் இருமையிலும் பன்மையிலுமாய் பன்மையிலும் ஒருமையிலுமாய் பன்மையிலும் பன்மையிலுமாய் இருந்தால் ஸமாஸ பதம் பன்மையில் வரும்.

रामश्च कृष्णश्च - रामकृष्णौ ।

कृष्णश्च अर्जुनश्च - कृष्णार्जुनौ ।

पार्वती च परमेश्वरश्च - पार्वतीपरमेश्वरौ ।

अश्वश्च गजौ च, अश्वौ च गजाश्च - अश्वगजाः ।

अश्वौ च गजौ च, अश्वाश्च गजौ च, अश्वौ च गजाश्च, अश्वाश्च गजाश्च - अश्वगजाः ।

2 बहुपद इतरेतरद्वन्द्व समासः இது எப்போதும் பன்மையிலே வரும்

रामश्च लक्ष्मणश्च भरतश्च शत्रुघ्नश्च = रामलक्ष्मणभरतशत्रुघ्नाः ।

युधिष्ठिरश्च भीमश्च अर्जुनश्च = युधिष्ठिरभीमार्जुनाः

3 द्विपदसमाहारद्वन्द्वः - समाहारद्वन्द्व ஸமாஸத்திலும் விக்ரஹ வாக்யம் च என்ற இடைச்சொல்லமைந்து தான் காணப்படும். முடிவில் அவைகளின் கூட்டு என்பதை விளக்க तयोः समाहारः அப்பொழுது ஒருமையிலும் ஸ்திரீ/ நபும்ஸகலிங்கங்களிலும் சொல் மாறுபடும். உதாரணம்.

पाणी च पादौ च तेषां समाहारः - पाणिपादं கைகால்

गंगा च शोणश्च तयोः समाहारः गङ्गाशोणं

४ बहुपद समाहारद्वन्द्वः

वीणा च वेणुश्च मृदंगश्च तेषां समाहारः वीणावेणुमृदंगम्

रथाश्च गजाश्च तुरगाश्च पदातयश्च तेषां समाहारः

= रथगजतुरगपदाति ।

மேலே சொன்ன உதாரணங்களை நோக்கும் போது இதரேதரயோக-ஸமாஸத்திலும் ஸமாஹார த்வந்த்வ ஸமாஸத்திலும் तयोः समाहारः, तेषां समाहारः என்று சொற்றொடரைத் தவிர மற்ற அம்சங்கள் ஒன்று போலுள்ளன. ஆனால் ''இந்த வகையைச் சேர்ந்த சொற்கள் समाहारद्वन्द्वः ஸமாஸத்தைத் தான் அடையும்'' என்று ஒரு வரையறையுள்ளது. அவ்வகையைச் சேர்ந்த சொற்களை इतरेतरयोगद्वन्द्व समास மாக உபயோகப்படுத்துவது பிழையாகும்.

ஸமாஹாரத்வந்த்வ ஸமாஸமடையத் தகுதி பெற்ற சொற்களின் பட்டியல்:

1. உடலுறுப்பைக் குறிக்கும் சொற்கள் :

कर्णौ च नासा च तेषां समाहारः कर्णनासं காதும் மூக்கும்

शिरश्च ग्रीवा च तयोः समाहारः शिरोग्रीवं

कटिश्च ऊरुश्च जंघा च तेषां समाहारः कटचूरुजंघम्

2. ஸங்கீதக் கருவிகள் :
घटः च वयोलिनश्च पटहश्च घटवयोलिनपटहम्।
भेरी च काहलश्च तयोः समाहारः भेरीकाहलम्॥

3. ஸேனையின் அங்கங்கள் :
नौकाश्च विमानानि च तेषां समाहारः नौकाविमानं
रथाश्च तुरगाश्च तेषां समाहारः रथतुरगं

4. பிராணிகளல்லாத ஜாதி வாசகச்சொற்கள் (Common Nouns)
दधि च क्षीरं च तयोः समाहारः दधिक्षीरं *தயிரும் பாலும்*
क्षीरं च मधु च तयोः समाहारः क्षीरमधु *பாலும் தேனும்*
आम्रं च पनसं च तयोः समाहारः आम्रपनसं *மாம்பழமும் பலாச்சுளையும்*
गृहं च आपणश्च तयोः समाहारः गृहापणं *வீடும் கடையும்*

*ஆனால் இவை திரவ்யங்களைக் குறிக்கவேண்டும்.*

5. வேறு லிங்கங்களிலுள்ள ஆறுகள்-நகரங்கள் *(தேசப்பகுதிகள்)*
काशी च प्रयागश्च तयोः समाहारः-काशीप्रयागं
भारतः च नेपालश्च तयोः समाहारः-भारतनेपालं
काशी च रामेश्वरं च तयोः समाहारः-काशीरामेश्वरं
गङ्गा च शोणश्च तयोः समाहारः-गङ्गाशोणं

6. *அற்ப ஜந்துக்கள் : (கீரியின் அளவுக்குக் குறைந்தவை)*
यूका च अलिक्षा च तयोः समाहारः यूकालिक्षं *பேனும் உண்ணியும்*
मशकाश्च मत्कुणाश्च तेषां समाहारः मशकमत्कुणं *கொசுவும் மூட்டைப்பூச்சியும்*

## षोडशः पाठः பாடம் 16

## दाने दोषः

नृगो नाम कश्चन राजा। तस्य गोष्ठे बह्वयो धेनव आसन्। प्रजास्विव तास्वपि तस्य महती प्रीतिरासीत्। राज्ञी पुत्रमेकं सुषुवे। राजा नितरां आनन्दं अवाप। महनीयेभ्यः धेनूः ददौ।

तन्नगरस्थः कश्चित् गामेकां स्वगृहे पालयन्नास्त । बन्धात् यदृच्छया मुक्ता सा गौः गृहात् बहिरागता इतस्ततः परिबभ्राम । सुदूरमागता पुनः गृहं गन्तुं नाजानात् । कथञ्चित् राज्ञो गोष्ठमागता राज्ञो गवां मध्यं अगच्छत् । राजा एतत् न अजानात् ।

दानशौण्डः स राजा तां कस्मैचित् महनीयाय ददौ । गोस्वामी स्वगोष्ठे गां अपश्यन् मार्गमाणः पथि महनीयेन नीयमानां तां अपश्यत् । "कुतो मम गां अपहृत्य गच्छसि" इति तमपृच्छत् । "राज्ञा इयं मह्यं दत्ता" इति स प्रत्यवादीत् । उभौ मिथो विवादमकुरुताम्, राज्ञः समीपमगच्छतां, कलहकारणं तस्मै न्यवेदयताम् ।

"कलहः मम अज्ञानात् उत्पन्नः, ततः मयैव अत्र प्रतिविधेयम्" इति राजा अमन्यत । स तं अवादीत् - "स्वामिन् ! एनां गां अस्मै प्रतियच्छ । तदर्थे अहं शतं गाः तुभ्यं दास्ये" इति । स तत् न अभ्युपगच्छति स्म । गोस्वामिनं राजा प्रार्थयामास - "अयि ! सा गौः यदृच्छया मम गोष्ठे संमिलिता । अज्ञानात् तां मदीयां मन्वानः, तामहं अस्मै अदाम् । क्षमस्व तमपराधम् । तस्या अर्थे शतं गाः तुभ्यं दास्ये । प्रतीच्छ, नास्या अर्थे आग्रहं कुर्याः" इति । सोऽपि तत् नान्वमन्यत । उभौ क्रोधकलुषौ बहिर्गतौ ।

"किं कर्तव्यं" इत्यजानन्, शोकेन दीनः राजा ममार । पितृलोके यमः तं प्रोवाच - राजन्, त्वया सुकृतानि बहूनि आचरितानि । परं तन्मध्ये बलवत्तरं दुष्कृतं किञ्चित् अज्ञानात् कृतं कर्म अनुभोक्तव्यम् । यो दत्तमपहरति स कृकलासो जायते । अतः कृकलासो भव इति तमन्वजानात् । राजा द्वारकाया बहिः कस्मिंश्चित्कूपे बहून् वत्सरानवसत् । अन्ते कृष्णः तं कूपात् बहिः उज्जहार । तत्पादस्पर्शात् राजा कृकलासभावात् मुक्तः सुकृतफलं अनुभवितुं अन्यज्जन्म प्रपेदे ।

न परस्वं अपहरेत् । अज्ञानात् कृतोऽपि परस्वापहारः महतेऽनिष्टाय कल्पते । अतः स्वकीयतया न्याय्येन मार्गेण संपन्नमेव वस्तु स्वार्थे उपयुञ्ज्यात् । न परस्वं स्वोपयोगाय आदद्यात् ।

1. இந்தப் பாடத்தைத் தமிழில் மொழிபெயர்க்கவும்.

2. இந்தப் பாடத்தில் பல ஸந்தி சேர்ந்த பதங்கள் உள்ளன. அவற்றைப் பிரித்து எழுதவும். பல இடங்களில் ஸந்தி சேர்க்கவேண்டியிருந்தும் சேர்க்காமல் விட்டுள்ளோம். அவற்றைச் சேர்த்து எழுதவும்.

3. கொடுக்கப்பட்டள்ள பதங்கள் உள்ள விபக்தியில் மற்ற இரு வசனங்களை எழுதுக.

प्रीतिः, उभौ, मया, अस्मै, अपराधः, महत्, राजन्, द्वारकायाः ।

4. இந்த ஸமாஸமடைந்த பதங்களைப் பிரித்து எழுதி ஸமாஸத்தின் பெயரைக் குறிப்பிடவும்

स्वगृहे, कलहकारणं, गोस्वामी, क्रोधकलुषौ, स्वोपयोगाय ।

கடினபதவுரை:

प्रजासु इव மக்களிடத்தில் போல் महनीयः பெரியவர், மதிப்பிற்குரியவர் परिबभ्राम சுற்றி வந்தது अजानात् அறிந்தது. அறிந்தான் अपश्यन् காணுதவனுக अदां கொடுத்தேன் प्रतियच्छ திருப்பிக்கொடு आग्रहः பிடிவாதம் सुकृतं நற்செயல் दुष्कृतं பாவம் दत्त-अपहारः தானம் கொடுத்ததைப் பிடுங்கிக்கொள்வது कृकलासः ஓணுன் परस्व-अपहारः பிறரது உரிமையை (சொத்தைப்) பறிப்பது.)

## सप्तदशः पाठः — பாடம் 17

## सुभाषितानि

भूतदया भूतिदायिनी पुंसाम् ।

பிராணிகளிடத்தில் கருணை மாந்தர்க்கும் நலனை அளிப்பதாகும்.

सर्पादपि सन्मणिर्हि संभवति ।

பாம்பிலிருந்தும் கூட நல்ரத்தினம் விளைகிறது.

संपदि संपत् समेधते ।

செல்வத்தில் செல்வம் சேரும்.

विदुषामपि जातु जायते मोहः ।

*கற்றவர்களுக்கும் சிலசமயம் கலக்கம் ஏற்படுகிறது.*

**नौरपि शकटं कदाचिदारोहेत्।**

*ஓடமும் ஒருசமயம் வண்டியின் மீது ஏறும்.*

**तथ्यं पथ्यं प्रियं स्वदेत न किम्।**

*உண்மையானது இதமானதும் பிரியமானதாகவுமிருந்தால் ருசிக்காதா?*

**स्वोद्यम एवाशु साधयेत् कार्यम्।**

*தன் முயற்சியே சீக்கிரம் காரியத்தைச் சாதிக்கும்.*

**परकार्यपरा हि साधवो लोके।**

*உலகில் நல்லோர்கள் பிறரது காரியத்திலேயே (பிறருக்கு உதவுவதிலேயே) ஈடுபட்டுள்ளவர்கள் அல்லவா?*

**चतुरः चतुरोऽपि साधयत्यर्थान्।**

*திறமையுள்ளவர் நான்கு (அறம், பொருள், இன்பம், வீடு) கார்யங்களையும் சாதிப்பார்.*

**कार्यपरा न गणयन्ति परखेदम्।**

*(தன்) காரியத்தில் குறியுள்ளவர் பிறரது சங்கடத்தைப் பொருட்படுத்தமாட்டார்கள்.*

**श्रेयसि बहुलीभवन्ति विघ्नाश्च।**

*நற்பணியில் இடையூறுகள் அதிகம் ஏற்படும்.*

**स्फुलिंगमपि निर्दहेत्पलालचयम्।**

*கனல் பொறியும் பெருவைக்கோல்போரை எரித்துவிடும்.*

**பயிற்சி : ஏதேனும் ஒரு பழமொழியை எடுத்துக்கொண்டு ஸம்ஸ்க்ருதத்தில் 50 பதங்களுக்குக் குறையாமல் ஒரு கட்டுரை எழுதுக.**

## अष्टादशः पाठः பாடம் 18

## विसर्गसन्धिः விஸர்க்கஸந்தி

***விஸர்க்க ஸந்தி பற்றிப் பாடமாலா 3ல் வந்துள்ளதை ஒருமுறை கருத்துடன் படித்துவிட்டு மேல் தொடரவும்.***

रुत्वसन्धिः - इ முதல் औ வரை உள்ள உயிர் எழுத்து களுக்கு மேல் வரும் விஸர்க்கம் உயிர் எழுத்துக்களோ மிருது மெய் எழுத்துக்களோ மேலே வரும்போது र् என்று மாறும். இதற்கு रुत्वसन्धि என்று பெயர்.

इ முதல் औ + : + உயிர் எழுத்துக்கள் அல்லது மிருதுவான மெய்யெழுத்துக்கள், : र् என்று மாறும் என்பது சூத்திரம்.

உ-ம் हरिः + असकृत् आगच्छति = हरिरसकृत् आगच्छति।

गुरु : + उदाहरणानि कथयति = गुरुरुदाहरणानि कथयति।

अन्धोः + अन्तः जलं नास्ति = अन्धोरन्तः जलं नास्ति।

मृगयुः + बाणैः+विध्यति = मृगयुर्बाणैर्विध्यति।

இந்த விதிகள் மூலம் अ முதல் औ வரை உள்ள உயிரெழுத்து களுக்கு மேல் உயிரெழுத்துக்களோ மெய் எழுத்துக்களோ வந்தால் ஏற்படும் மாறுதல்களைக் கற்றோம். கடின மெய் எழுத்துக்கள் (13) மேலே வரும்போது ஏற்படும் மாறுதல்கள் இனி கற்கப்பட வேண்டும். அந்த விதிகளில் விஸர்க்கத்துக்கு முன்னால் இருக்கும் உயிரெழுத்துக்களை பற்றிய நிபந்தனை ஏதும் கிடையாது. இனி விதிகளைக் காண்போம்.

(अ) : + क =ᳵक, : + ख =ᳵख, : + प =ᳶप, : + फ =ᳶफ என மாறும். ஆனால் இன்று வேதத்தில் தவிர மற்ற இடங்களில் இந்த மாறுதல் வழக்கில் இல்லை.

(आ) :+ च छ, ट ठ, त थ என்றிருக்கும்போது விஸர்க்கம் முறையே श् ष् स् என்று மாறும்.

(इ) : + श ष स என்றிருக்கும் போது முறையே श् ष् स् என்று மாறும். ஆனால் இம்முறை (इ) இக்காலத்தில் கையாளப் படுவதே இல்லை. ஸந்தி சேர்க்கப்படாமலே எழுதுவது வழக்கமாகி விட்டது. ஸந்தி கிடையாது என்றில்லை.

உதாரணம் : (अ) बालः (०%) कन्दुकेन क्रीडति। विहगाः (०%) खे डयन्ते। गुरुः (०%) पाठं बोधयति। गोविन्दः (०%) फलानि भक्षयति।

